# அதிசய நாய்




வாண்டு மாமா



பழனியப்பா பிரதர்ஸ்

சென்னை - 600 014 திருச்சி - 620 002
சேலம் - 636 001 கோயமுத்தூர் - 641 001
மதுரை - 625 001 ஈரோடு - 638 001

**ATHISAYA NAAI**

Subject : Story for Children

Author : V. K. MOORTHY
(Vandu Mama)

Publishers : Palaniappa Bros.,
Madras - 600 014 Trichy - 620 002
Salem - 636 001 Coimbatore - 641 001
Madurai - 625 001 Erode - 638 001.

Printers : Asian Printers, Madras - 600 014.

Price : Rs. 11-90

First Edition : 28th April, 1961

Fourth Edition : 1975

Fifth Edition : 1988

ஏஷியன் அச்சகம், சென்னை - 600 014

# முன்னுரை

குழந்தைகளே! உங்கள் அபிமான எழுத்தாளரான வாண்டு மாமா திடீரென்று ஒருநாள் என்னிடம் வந்து, "எனது நூல் ஒன்றுக்கு உங்கள் முன்னுரை வேண்டும்," என்றார். நான் சிறிது தயங்கினேன், முன்னுரை எழுத நமக்கு என்ன தகுதி என்று! எனது அந்தத் தயக்கம் வாண்டு மாமாவுக்கு எப்படித்தான் தெரிந்ததோ, புரியவில்லை! "என்ன தயங்கு கிறீர்கள்? எழுதித்தான் ஆகவேண்டும்!" என்று உத்தரவு போட்டார். அவர் போட்ட அந்த உத்தரவிலே, எனக்குத் தகுதியிருப்பதாகத் தீர்மானித்து முன்னுரை எழுதிவிடுவது என்று முடிவு செய்துவிட்டேன்.

அப்படி நான் சட்டென்று முடிவு செய்யாவிட்டால், உங்கள் வாண்டு மாமாவிடம் நான் மாட்டிக்கொண்டு திண்டாட வேண்டியிருந்திருக்கும். "நீயுந்தான் குழந்தைகளுக்குக் கதைகள் எழுதியிருக்கிறாயே, எந்தத் தைரியத்தில் எழுதினாய்?" என்று அவர் கேட்டுவிட்டால், நான் என்ன பதில் சொல்வது?

இந்த வாண்டு மாமா இருக்கிறாரே, இவர் என் நெருங்கிய நண்பர். குழந்தைகளின் உள்ளப் பாங்கை நன்கு உணர்ந்தவர். கெட்டிக்காரப் பொல்லாதவர். குழந்தைகளுக்கென்று அவர் ஏராளமாக எழுதிக் குவித்திருக்கிறார். அதுமட்டும் அல்ல; 'கிங்கிணி', 'வானவில்' போன்ற குழந்தைப் பத்திரிகைகள் நடத்தியிருக்கிறார். குழந்தைகளின் மனம் அவருக்குத் தெரிந்திருப்பது போலப் பிறருக்குத் தெரிந்திருக்க நியாய மில்லை. இதை எப்படி நான் தைரியமாகச் சொல்கிறேன் என்றால், நீங்கள் உங்கள் நண்பர்களின் மனத்தை அறிந்து கொண்டிருப்பது போல, நானும் என் நண்பர்களின் மனத்தைப் புரிந்துகொண்டுதானே இருக்க வேண்டும்?

என்னைக் கேட்டால், 'பெரியவர்களுக்குக் கதைகள் எழுதி நல்ல பெயர் எடுத்துவிடலாம். குழந்தைகளாகிய உங்களுக்குக்

கதை எழுதி உங்களிடம் நல்ல பெயர் சம்பாதிப்பதுதான் சிரமமான காரியம்' என்பேன். பெரியவர்களும் குழந்தைகளாக இருந்துதான் பெரியவர்களாகி இருக்கிறார்கள் என்றாலும், குழந்தை மனத்துக்குள்ள சூட்சுமம் அவர்களுக்கு இருப்ப தில்லை. அப்படியே இருந்தாலும், அதை உபயோகித்து ஆனை மடக்க அவர்களுக்கு நேரம் இருப்பதில்லை. எனவே, பொழுது போக்குக்காகக் கதையைப் படித்துவிட்டுப் பேசாமல் போய்விடு வார்கள்.

ஆனால், நீங்கள்...? நூறு கேள்விகள் கேட்டு ஆனைப் பதம் பார்த்துவிடுவீர்கள். அதுவும் உங்களிடம் முக்கியமாக இரண்டு கேள்விச் சொற்கள் பெரியனவாக இருக்கின்றன. அவற்றைத் தூக்கிப் போட்டுவிட்டீர்களானால், உங்களுக்கு இந்த எழுத்தாளர்களின் வண்டவாளம் ஒருவாறு புரிந்துவிடும்; எங்கு எங்கு அவர்களது கதை பலவீனமாயிருக்கிறது, எங்கு எங்கு கதையின் ஜோடனை கெட்டிருக்கிறது என்பனவெல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிடும். அப்புறம் உங்களிடம் மாட்டிக் கொண்ட எழுத்தாளனின் பாடு திண்டாட்டந்தானே?

உங்கள் ஆயுதமான அந்தக் கேள்விச் சொற்கள் எனக்கு எப்படித் தெரியும் என்றுதானே கேட்கிறீர்கள்? நானும் ஒரு காலத்தில் உங்களைப் போல் குழந்தையாயிருந்து இன்று வளர்ந்திருப்பவன்தானே? எங்கள் அப்பா - அம்மாவைக் கேள்விகளுக்குமேல் கேள்விகளாகக் கேட்டுத் திணற அடித் தவன் தானே?

இப்படி ஏதேதோ எழுதிக்கொண்டுபோய் அந்தக் கேள்விச் சொற்களைச் சொல்லாமலே சாடுவிடுகிறானே, இவனுக்கு அந்தச் சொற்கள் தெரியவே தெரியாதோ என்று எண்ணிவிடாதீர்கள். அந்த இரண்டு கேள்விச் சொற்களும் இவைதாம் : என்? எப்படி?

'இந்தக் கதையில் வரும் அதிசய நாய் இங்கே எப்படி வந்தது? என்று கேள்வி கேட்டு, 'என் வந்தது?' என்றும்

மடக்கினீர்களானால் யாரால் பதில் சொல்ல முடியும்? சிலர் ஏதாவது சொல்லிச் சமாளிக்கப் பார்ப்பார்கள். ஆனால் நீங்கள் 'ஏன், எப்படி'யைத் திருப்பித் திருப்பிப் போட்டீர்களானால், ஆளை விட்டால் போதும் என்று அவர்களும் கம்பி நீட்டவே பார்ப்பார்கள். அதுவரை நீங்களுந்தான் அவர்களை விடமாட்டீர்களே!

ஆனால் இந்த வாண்டு மாமா இலேசுப்பட்டவர் இல்லை. உங்கள் குணத்தை நன்கு அறிந்தவர் ஆதலால், நீங்கள் 'ஏன், எப்படி' என்னும் கேள்விச் சொற்களை எங்கெல்லாம் போடு வீர்கள் என்பதை அறிந்து கதையைச் சுவாரஸ்யமாகச் சொல்லிக்கொண்டு போகிறார். கதை படிக்கும் சுவாரஸ்யத்தில் நீங்கள் உங்கள் கேள்விச் சொற்களைக் கட்டாயம் மறந்து விடுவீர்கள். அதுவும், 'அதிசய நாய்' என்னும் இக்கதையைப் படிக்கும் பொழுது உங்களுக்கு உங்கள் நினைவே இராது.

'கல்பக விருக்ஷம், காமதேனு' என்று சொல்லுகிறார்களே, அவையெல்லாங்கூட வேண்டா. அதிசய நாயான மணி நம் மிடம் இருந்துவிட்டால் போதும்' என்று எண்ணத் தோன்றும் உங்களுக்கு. அது கந்தன் என்னும் ஏழைச்சிறுவனுக்கு ஆபத்தில் உதவும் நேசனாக இருந்து, எத்தனை எத்தனையோ இன்னல்களையும், இடையூறுகளையும் எதிர்த்துப் போராடியிருக்கிறது. உயிரையும் பொருட்படுத்தாது உதவி, கந்தனை அரசகுமாரனாக்கிச் சிம்மாசனத்தில் ஏற்றி மகிழ்ந் திருக்கிறது. 'இப்படிச் செய்வானேன் ஒரு நாய்?' என்று கேட்பீர்களானால், அதற்கு விடை இதுதான்:

ஒரு சமயம் அது வலையில் சிக்கியபொழுது கந்தன் அதைக் காப்பாற்றியிருக்கிறான். நாய் நன்றியறிவுள்ள பிராணி அல்லவா? அவன் செய்த உதவிக்குப் பிரதி செய்து தன் நன்றிக் கடனைத் தீர்த்துக்கொண்டிருக்கிறது.

'எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'

இரண்டே வரிகளில் திருவள்ளுவர் பெருமான் நன்றியின் பெருமையைச் சொல்லியிருக்கிறார். அக்குறளுக்கு நல்லதொரு விளக்கமாக அமைந்துள்ளதுதான் அதிசய நாய் என்னும் இந்தக் கதை.

குழந்தையுலகத்தின் நலனைக் கருதி, இக்கதையைப் படைத்த வாண்டுமாமாவுக்கு உங்கள் சார்பிலும் என் சார்பிலும் இம்முன்னுரை மூலம் இதயங்கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

'கல்கி' காரியாலயம்,
சென்னை-10,
9—9—61.

ரா. வீழிநாதன்.



# சந்திப்பு

துந்துபி நாட்டின் தலைநகர் சுந்தரபுரி. சுந்தரபுரியை சுமந்திரர் என்ற மன்னர் ஆண்டு வந்தார். துந்துபி நாட்டின் எல்லையிலே ஒரு பெரிய காடு இருந்தது. மலைகளும், குன்றுகளும், மரஞ்செடிகளும் அடர்ந்த அந்தக் காட்டை இதுவரை யாரும் முழுதும் ஆராய்ந்து அறிந்ததில்லை. அந்தக் காட்டிற்குள் எத்தனையோ அதிசயங்கள் இருப்பதாக அந்தப் பக்கத்து ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். அந்தக் காட்டிலுள்ள ஒரு மலையிலிருந்து நீலவேணி என்ற ஒரு நதி உற்பத்தியாகி, துந்துபி நாட்டின் குறுக்கே வளைந்து வளைந்து சென்று, அந்த நாட்டை வளப்படுத்திக்கொண்டிருந்தது.

விசாலமான துந்துபி நாட்டிலே மன்னரின் ஆளுகைக்கு உட்பட்ட பல பாளையக்காரர்கள் சிற்றரசர்களைப் போல வாழ்ந்து வந்தார்கள். அரசர் மிகமிக நல்லவர். நாட்டிலே அமைதி நிலவ வேண்டும் என்ற எண்ணமுடையவர்.

அந்தக் காட்டையடுத்து ஒரு சிறு கிராமம். காட்டிலிருந்து ஒரு ஒற்றையடிப்பாதை கிராமத்தை நோக்கிச் சென்றது. அந்தப் பாதை மிகவும் குறுகலாக இருந்தது. அதன் இரு பக்கமும் அடர்த்தியான முட்செடிகள் மண்டிக் கிடந்தன. அந்தக் கரடுமுரடான பாதை வழியே தள்ளாடித் தள்ளாடி

நடந்து வந்துகொண்டிருந்தான் ஒரு பையன். அவன் தலையில் விறகுகளும் சுள்ளிகளும் அடுக்கிக் கட்டப்பட்ட ஒரு பெரிய கட்டு இருந்தது. சுமையின் பளு தாங்காமல், மூச்சு வாங்கிற்று அவனுக்கு. உடலிலிருந்து வியர்வை வெள்ளமாக வழிந்து கொண்டிருந்தது. பாதை ஓரத்து முட்புதர்களின் கிளைகள் அவன் கந்தல் வேஷ்டியை அடிக்கடி தொட்டு இன்னும் அதைக் கந்தலாக்கியதோடு உடலிலே கீறி இரத்தம் சொட்டச் செய்திருந்தன.

அந்தப் பையனின் பெயர் கந்தன். அவனுக்குப் பன்னிரண்டு வயதிருக்கும். களை பொருந்திய முகம். குறு குறுத்த பார்வை. ஆனால், இளைத்த உடல். இடுப்பிலே அழுக்கேறிப்போன ஒரு வேஷ்டி. அவனைப் பார்த்தாலே பரிதாபமாக இருந்தது. அவன் பார்வையிலே பயமும் நடையிலே வேகமும் காணப்பட்டன. யாருக்காகவோ அவன் பயப்படுவது நன்றாகத் தெரிந்தது. கந்தன் இத்தனை நேரம் சங்கிலியின் குடிசையில் இருக்க வேண்டியவன். அன்று நேரமாகி விட்டது. சங்கிலியிடந்தான் அவன் வேலை செய்து வந்தான். கந்தன் சங்கிலியைத் தன் தந்தையாகவும், அவர் மனைவி வீராயியைத் தன் தாயாகவும் எண்ணி வந்தான். ஆனால், அவர்களோ கந்தனைத் தங்கள் அடிமைபோல் எண்ணிக் கொடுமைப்படுத்தினார்கள்.

'இன்று போனதும் உதை கிடைப்பது நிச்சயம்' என்று எண்ணியபடியே நடக்கலானான் கந்தன். ஒரு நாளைக்காவது ஒரு தடவையாவது அவனை அவர்கள் அடிக்காமல் இருக்க மாட்டார்கள். சங்கிலியாவது ஒரு மாதிரி. அவன் மனைவி வீராயியை எண்ணியதும் அவன் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. துரிதமாக நடக்கலானான். பள்ளம் மேடு பார்க் காமல் நடந்தான். முள் கிழித்து இரத்தம் கொட்டுவதை லட்சியம் செய்யாமல் நடந்தான்; நடந்துகொண்டே இருந்தான்.

"ஐயோ,....இது என்ன!" —தடுமாறினான் கந்தன். அவன் தலையிலிருந்த விறகுக்கட்டை யாரோ இழுப்பது போலிருந்தது. அடுத்த நிமிஷம் அவன் தலையிலிருந்த விறகுக் கட்டு தடா

லென்று கீழே விழுந்தது. தவிப்போடு திரும்பிய கந்தன் பின்னால் யாருமில்லாததைக் கண்டு திகைத்தான். கந்தனின் தலையிலிருந்த விறகுக் கட்டை யாரும் பிடித்து இழுக்கவில்லை. தாழ்ந்து வளர்ந்திருந்த ஒரு மரக்கிளையில் கட்டு மாட்டிக் கொண்டது.

''ஐயோ, இன்றைக்கு என்ன நடக்கப்போகிறதோ? அதிக நேரமாகிவிட்டதே' என்று பரபரப்புடன் சிதறிக்கிடந்த விறகு களை ஒன்றுசேர்க்க ஆரம்பித்தான். அப்போது அவன் கவனத்தை ஒரு சப்தம் கவர்ந்தது. அந்த நிழல் கவிந்த பயங்கரமான காட்டில், அவன் நின்றுகொண்டிருந்த இடத்துக் குப் பக்கத்திலிருந்துதான் அந்தச் சப்தம்வந்தது. விநோதமான சப்தம் - யாரோ அழுவதுபோல. ஆனால், மனிதக் குரலில்லை. ஏதோ பிராணி கஷ்டப்பட்டு ஊளையிடுவதுபோல. வரவர அந்த அழுகை உருக்கமாக இருந்தது. அவனுக்குள்ள அவசரத்திலும், அழும் பிராணியைக் கவனிக்காமல் போக அவன் மனம் இடந்தரவில்லை. சப்தம் வந்த திசைக்குத் தாவிக் குதித்து ஓடினான். ''இந்தா...இந்தா...யார்...நீ? எங்கே இருக்கே ..?'' என்று குரல் கொடுத்தான். பிறகு, பிராணி எப்படிப் பேசும், பதில் சொல்லும் என்ற எண்ணம் நினைவுக்கு வரவும், அவனுக்கே வெட்கமாகப் போய்விட்டது.

ஆனால், கந்தனின் கேள்விக்குப் பதில் கிடைத்தது. 'ளொள்...ளொள்...ளொள்...ம்...ஊ...ளொள்...'' துன்பத்தில் சிக்கி இருப்பது ஒரு நாய்தான் என்று கந்தனுக்குத் தெரிந்து விட்டது. தைரியத்தோடு புதர்களை விலக்கிவிட்டுப் பார்த்தான். அவன் அங்கு கண்ட காட்சி என்ன தெரியுமா? கொழுகொழு வென்று கம்பீரமாக வளர்ந்த ஓர் அழகான நாய். நாக்கைத் தொங்கவிட்டபடி பொறியில் மாட்டிக்கொண்டிருக்கும் தன் காலை விடுவிக்க முயன்றுகொண்டிருந்தது. அதைப் போன்ற அழகான நாயை அவன் பார்த்ததே இல்லை.

கரடி, நரி போன்ற மிருகங்களைப் பிடிக்கத்தான் அந்தக் கண்ணிப் பொறி வைப்பார்கள் என்று அவன் கேள்விப்பட்டிருக் கிறான். ஒரு நாயை, அதுவும் இத்தனை அழகான நாயைப்

பிடிக்கப் பொறியா! கந்தன் அதை விடுவிக்க அதன் அருகில் சென்றான். கந்தனைக் கண்டதும் நாய் மெதுவாக ஊளை யிட்டது. பாதிக் கண்ணை மூடிக்கொண்டு தன்னை விடுவிக்கும் படி மன்றாடிக் கேட்பது போலிருந்தது, கந்தனுக்கு. கந்தன் தாமதிக்கவில்லை நாயின் காலைப் பிடித்திருக்கும் பொறியை இழுத்துப் பார்த்தான். அவனால் முடியவில்லை. தன் பலங் கொண்ட மட்டும் இழுத்துப் பார்த்தான். ஊஹூம், முடிய வில்லை. சட்டென்று ஒரு மரக்கிளையை ஒடித்து, அந்தப் பொறியில் கொடுத்து, மூச்சுக் கட்டி நெம்பினான். நாயும் அவனுக்கு உதவியாக வளைந்து கொடுத்துக்கொண்டு தான் விடுதலையாவதை ஆவலுடன் எதிர்பார்த்தது.

'டணார்'—பொறி தெறித்து விழுந்தது. விடுதலையடைந்த ஆனந்தத்தில் அந்த நாய் கந்தன் முகத்தையும் கைகளையும் ஆசையோடு நக்கிற்று. அவனைச் சுற்றிச் சுற்றி வந்தது. தன் முன்னங்கால்களை அவன்மீது வைத்துக்கொண்டு தொத்தி நின்று கழுத்தை அவனிடம் நீட்டிற்று. கந்தன் அதன் தலையைச் சொறிந்து கொடுத்துக் கழுத்தைத் தடவினான். கண்களை மூடிக்கொண்டு அது இன்பமாக ஊளையிட்டது. கந்தன் உடனே அதற்கு ஒரு பெயர் வைத்துவிட்டான்.

"மணி...மணி!" ஆம், மணிதான். அந்தப் பெயர்தான் அவனுக்குப் பிடித்திருந்தது.

"மணி, மணி, எனக்கு நேரமாகிறது. நான் இன்னும் இரண்டு மைல் போயாக வேண்டும்" என்று அதன் கால்களை எடுத்துத் தரையில் வைத்துவிட்டு ஓடினான் கந்தன். சிதறிக் கிடந்த தன் விறகுக் கட்டை அவசரமாகப் பொறுக்கி ஒன்று சேர்த்தான். மணி மெதுவாக நொண்டியபடியே அவன் அருகில் வந்தது. கந்தனின் பரபரப்பைப் பார்த்தது. அவன் தவிப்பை உணர்ந்துகொண்டது போலத் தன் வாயினால் ஒவ்வொரு விறகாகக் கௌவிக்கொண்டு வந்து, கந்தனின் விறகுக் கட்டில் வைத்தது.

அதன் அறிவைக் கண்ட கந்தன் வியந்து போனான். "மணி, உன் எஜமானர் காத்திருப்பார், தேடுவார், ஓடிப்போய்

விடு. இனி, இந்த மாதிரி காட்டுக்குள் வந்து கண்ணியில் மாட்டிக்கொள்ளாதே'' என்று வாலை ஆட்டிக்கொண்டு நிற்கும் அதன் முதுகில் தடவிக் கொடுத்துவிட்டு, விறகுக் கட்டைத் தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு வேகமாக ஓடலானான். இப்பொழுது அவன் நினைவில் சங்கிலியும் வீராயியுந்தான் நிறைந்திருந்தனர்.

குடிசையை நெருங்க நெருங்கக் கந்தனின் மனம் திக்திக் என்று அடித்துக்கொண்டது. குடிசை வாசலில் வீராயி இடுப்பில் கைவைத்தபடி கந்தனை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந் தாள். சங்கிலி இன்னும் வரவில்லை போலிருக்கிறது. அவனுக்கு உணவு தயாரிக்கவில்லை. வந்ததும் அவன் உணவு கேட்டால், 'அந்தக் கழுதை கந்தன் விறகு கொண்டுவரவே இல்லை' என்பாள். உடனே சங்கிலி முறுக்கிய கயிற்றை எடுத்து, வீறு வீறு என்று வீறப்போகிறான். அப்பப்பா....அதை நினைக்கும் போதே கந்தனுக்கு உடல் நடுங்கிற்று.

வீராயியின் கண்களில் படாமல் குடிசையின் பின்பக்கமாகச் சென்று, விறகுக் கட்டை அடுப்பருகில் வைத்துவிட்டுத் திரும் பினான். வீராயியைக் கூப்பிட்டு விறகு கொண்டுவந்துவிட்ட தாகச் சொல்லலாமா என்று எண்ணினான். ஆனால், இரண்டு தடவை அடி வாங்குவதைவிடச் சங்கிலி வந்ததும் ஒரே தடவை யாக அடி வாங்கிக்கொள்ளலாம் என்று பேசாமல் கிணற்றடிக்குப் போய்விட்டான்.

கந்தனுக்குத் தெரியாமல் கந்தனைப் பின்தொடர்ந்து வந்த மணி, குடிசைக்குச் சற்றுத் தூரத்தில் பதுங்கியபடி மறைந்திருந் தது. கந்தனின் வீட்டை அறிந்து போகத்தான் அது அப்படி வந்திருக்க வேண்டும். சங்கிலி களைத்துப்போய் வளைந்து வரும் அந்தப் பாதையிலேயே வேகமாக வந்துகொண்டிருந் தான். நாக்கைத் தொங்கவிட்டபடி பாதையோரத்தில் மறைந்து படுத்திருந்த மணியை அவன் கவனிக்கவில்லை. இருவருக்கும் நடுவே ஒரு மான்குட்டி, பாதையோரத்துப் பசும்புல்லைக் கடிக்க எங்கிருந்தோ ஓடி வந்தது. மானைக் கண்ட சங்கிலியின் கண்கள் பளபளத்தன.

"ஆ... சரியான வேட்டை. நாலு நாளைக்கு நல்ல ஆகாரம்" என்று சொல்லியபடி பதுங்கிப் பதுங்கி மானைப் பிடிக்க நெருங்கினான். மணி இதைப் பார்த்துக்கொண்டே இருந்தது. தலையை ஒரு புறமாகச் சாய்த்து உற்றுப் பார்த்தது. சங்கிலியின் செய்கை அதற்கு விளங்கிவிட்டது. அடுத்த விநாடி 'ளொள் ளொள்' என்று சத்தமிட்டு மானை உஷார்ப்படுத்திவிட்டது. மான் சிட்டாகப் பறந்தது. கைக் கெட்டியது வாய்க்கு எட்டவில்லை சங்கிலிக்கு. ஓடினான். ஆனால், மானைப் போல மனிதனால் ஓட முடியுமா? ஏமாந்து திரும்பிய சங்கிலியின் கண்களில் மட்டும் மணி பட்டிருந்தால் அதை அப்படியே கொன்று போட்டிருப்பான். அதன்மீது அத்தனை ஆத்திரம் அவனுக்கு. ஆனால், அவன் முன் வாலை ஆட்டிக்கொண்டு நிற்க மணிக்கு என்ன பைத்தியமா?

"ஏ வீராயி, சோறு ஆக்கிட்டியா?" என்று கேட்டுக் கொண்டே அலுப்புடன் உள்ளே நுழைந்தான் சங்கிலி.

"சோறா... எப்படிச் சமைக்கிறதாம்? விறகுக்குப் போன பயலைக் காணோம்; அவனுக்கு நீ பூசை கொடுக்காமே பய கொழுத்துப் போயிட்டான்" என்று உள்ளே திரும்பிய வீராயி வியப்பினால் ஸ்தம்பித்துவிட்டாள். அடுப்படியில் விறகு... வழக்கத்துக்கு அதிகமாகவே வைக்கப்பட்டிருந்தது. சங்கிலியும் பார்த்தான்.

'ஏம்புள்ளே பூசை உனக்கா அவனுக்கா?" என்றான். அப்போதுதான் தவலையில் தண்ணீருடன் உள்ளே நுழைந்த கந்தனைப் பார்த்த வீராயி "ஏண்டா கழுதே, விறகு கொணர்ந் துட்டேன்னு சொன்னா என்ன?" என்று ஒரு விறகை எடுத்து அவனை அடிக்க ஓடினாள்.

"இந்தா புள்ளே .. நில்லு... அவனை ஏன் அடிக்கப் போறே—நீ பராக்கு பாத்திருந்திட்டு" என்று அவளைத் தடுத்துவிட்டு, "எய் கந்தா, இப்படி வந்து என் காலைப் புடிச்சு விடு" என்று சொல்லிக்கொண்டே, கயிறுகள் அறுந்து, பள்ளம் விழுந்து போன கயிற்றுக்கட்டிலில் போய் 'அப்பாடா" என்று உட்கார்ந்தான். கந்தனும் தவலையை இறக்கி வைத்துவிட்டுச்

சங்கிலியின் புழுதி படிந்த கால்களைத் தன் பிஞ்சுக் கரங்களால் பிடித்துவிடலானான்.

'நல்ல வேளை, இன்னிக்கு அடி இல்லை, தப்பினோம்' என்று குதூகலப்பட்டது அவன் உள்ளம். சங்கிலி சுமுகமாக இருக்கிறான் என்று கண்ட கந்தன் அவன் முகத்தையே பார்த்தான். எதையோ கேட்க அவன் உதடுகள் துடித்தன. கேட்டும் விட்டான்.

"அய்யா, நாளைக்கு...வந்து நீங்க மாரியம்மன் தேர்த் திருவிழாவுக்குப் போகப் போறீங்க, இல்லையா?" தட்டுத் தடுமாறியபடியே கேட்டான் கந்தன்.

"ஆமா, அதுக்கு என்னவாம்?" என்றான் சங்கிலி கொட்டாவி விட்டபடி.

"என்னையும் கூட்டிப் போறீங்களா?"

"என்ன? திருவிழா வேறயா உனக்கு? சீ...போ எட்டி! ......மருவாதையா வீட்டைப் பார்த்துக்கிட்டுக் கெட." காலை உதறிவிட்டு எழுந்திருந்தான் சங்கிலி.

கந்தன் வெலவெலத்துப் போய்விட்டான். தொங்கிய தலையுடன் குடிசைக்கு வெளியே பரப்பி இருந்த வைக்கோலில் போய், அப்படியே துவண்டு விழுந்து சுருண்டு முடங்கிக் கொண்டான். நெஞ்சு வெடித்துவிடும் போல அழுகை குமுறிக் கொண்டு வந்தது. விம்மி விம்மி அழுதான். அழுது அழுது அப்படியே அயர்ந்து தூங்கியும்விட்டான். பசித்த அவன் வயிற்றுக்கு யாரும் கூப்பிட்டு எதுவும் கொடுக்கவில்லை.



## புதையலின் காவலாளி

"டேய் விடியா மூஞ்சி, எழுந்திருடா" என்ற அதட்டலைக் கேட்டுக் கந்தன் துள்ளிக் குதித்து எழுந்திருந்தான். நன்றாக விடிந்துவிட்டது. அன்று அவன் வெகுநேரம் தூங்கிவிட்டான். பரபரப்புடன் ஓடினான் கந்தன். அவனுக்கு எவ்வளவோ வேலை காத்திருந்தது. சாதாரண நாளாக இருந்தால் கந்தன் இத்தனை நேரம் கழித்து எழுந்திருந்ததற்குச் சங்கிலியும் வீராயியும் அவன் முதுகை வீங்க வைத்திருப்பார்கள். ஆனால், இன்று இருவரும் மாரியம்மன் திருவிழாவிற்கு அடுத்த ஊருக்குக் கிளம்பிக்கொண்டிருந்த மும்முரத்தில் கந்தன்மீது கவனத்தைச் செலுத்தவில்லை.

பானைக்குள் திணித்து வைத்திருந்த பழைய பட்டுப் புடைவையை எடுத்து இடையில் சுற்றிக்கொண்டிருந்தாள் வீராயி. விளக்கெண்ணெய் தடவி வாரி இருந்தும் தலைமுடி கட்டுப்படாமல் கலைந்து கிடந்தது. அவளைப் பார்க்கப் பத்திர காளிபோல இருந்தாள். சங்கிலி கோடி உடுத்தி, தலையில் ஒரு உருமால் வேறு சுற்றிக்கொண்டிருந்தான். முறுக்கிவிட்ட மீசையுடன் கருப்பண சாமியைப் போலக் காட்சி அளித்தான் சங்கிலி.

"டேய் கந்தா, வீட்டை சாக்கிரதையாப் பாத்துக்க, எங்கேயும் போயிடாதே, என்ன?" என்று உத்தரவிட்டான் சங்கிலி.

''கூடையிலே இருக்கிற அரிசியை மாவாக அரைத்து வை. தொட்டி நிறையத் தண்ணி நிரப்பு. தவலையிலே நெல்லு கொட்டி வைச்சிருக்கேன், அதைப் புழுக்கிப் போடு'' என்று வரிசையாக அலுவல்களை அடுக்கிவிட்டுக் கிளம்பினாள் வீராயி.

வளைந்து வளைந்து செல்லும் பாதை வழியே, ஆடி ஆடி அவர்கள் போவதையே கண்களில் நீர் பளபளக்கப் பார்த்துக் கொண்டு நின்றான் கந்தன். இன்னும் சிறிது நேரத்தில் அவர்கள் திருவிழாவில் களிப்புடன் கலந்துகொண்டுவிடுவார்கள். அந்தக் கொட்டுமேளம், குடை ராட்டினம், பொய்க்கால் குதிரை, வாணவேடிக்கை, மிட்டாய்க் கடைகள்-இவற்றை எல்லாம் நினைக்க நினைக்கக் கந்தனுக்கு அழுகை பொத்துக்கொண்டு வந்தது. அந்தக் கோலாகலங்களை எல்லாம் காண நாம் பாக்கியம் செய்யவில்லை என்று மனத்தைத் தேற்றிக்கொண்டு தனக்காகக் காத்திருக்கும் அலுவல்களைக் கவனிக்கலானான்.

கிணற்றிலிருந்து நீர் இறைத்துக்கொண்டு குடிசைக்கு வந்தான் கந்தன். அங்கே, குடிசை வாசலில் வாலை ஆட்டிக் கொண்டு மணி நிற்பதைக் கண்டதும் கந்தனின் துக்கமெல்லாம் பறந்துவிட்டது. ஆவலோடு, ஆசையோடு, ஓடிப்போய் அணைத்துக்கொண்டான். மணி அவன் காலடியில், தன் வாயில் கௌவிக்கொண்டு வந்திருந்த ஏதோ ஒன்றைப் போட்டது. பிறகு கந்தனின் கையை நக்கிற்று. கந்தன் குனிந்து பார்த்தான். அவன் கண்கள் வியப்பினால் விரிந்தன. ஆச்சரியத்தினால் அப்படியே கத்திவிட்டான். அவன் காலடியில் அது போட்டது என்ன தெரியுமா? பளபளக்கும் ஒரு பவுன் நாணயம்.

''மணி...மணி...இது உனக்கு எங்கே கிடைத்தது?'' என்றான் கந்தன், அடக்க முடியாத ஆவலுடன் அதை அணைத்துக்கொண்டே. மணி அவனை அன்போடு பார்த்தது. தன் வாலை வேகமாக ஆட்டிற்று; மெதுவாக முனகிற்று.

கந்தனுக்கு அதன் பாஷை புரிந்துவிட்டது. ''என்னது, இது எனக்கே எனக்காக?'' என்றான். மணியும் ஆம் என்பது போலத் தலையை மேலும் கீழும் ஆட்டிவிட்டுக் குபீரென்று

பாய்ந்து, காட்டிற்குள் ஓடி மறைந்துவிட்டது. கந்தன் திகைத்துப்போய் மணி கொடுத்துவிட்டுப் போன பவுனைத் தன் உள்ளங்கையில் வைத்துக்கொண்டு அது போன திசையையே பார்த்துக்கொண்டு நின்றான்.

காட்டிற்குள் ஓடிய மணி எங்கே போகிறது என்று பார்ப்போம். பாய்ந்து பாய்ந்து ஓடிற்று மணி. மரங்களில் நுழைந்து நுழைந்து ஓடிற்று. கடைசியில் கந்தன் அதைக் காப்பாற்றிய இடத்துக்கு வந்ததும் ஒரு தடவை சுற்றுமுற்றும் பார்த்தது. பிறகு, அருகிலுள்ள ஒரு மலைமீது தாவி ஏறிற்று. அடேயப்பா. ...அதனோடு நம்மால் ஓட முடியாது. அவ்வளவு வேகமாக ஓடிற்று மணி. மலை உச்சியை அடைந்ததும் அங்கு புதர் மண்டிக் கிடந்த ஓர் இடத்தில் போய் ஒரு நிமிஷம் நின்று மறுபடி சுற்றுமுற்றும் நன்றாகப் பார்த்துக்கொண்டது. தன்னைப் பின் தொடர்ந்து யாரும் வரவில்லை என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டதும் புதர்களை விலக்கிக்கொண்டு உள்ளே நுழைந்தது.

என்ன ஆச்சரியம்......புதரின் பின்னால் ஒரு பெரிய குகை இருந்தது. மிகவும் பழக்கப்பட்டது போல மணி அந்தக் குகையினுள் வேகமாகப் போயிற்று. முதலில் இருட்டாக இருந்தாலும் உள்ளே போகப்போக குகையில் நல்ல வெளிச்சம் இருந்தது. உள்ளே வெகுதூரம் போய்க் கடைசியில் வலப்பக்கம் திரும்பிற்று மணி. அங்கே விசாலமான ஒரு கூடத்தைப் போலக் காணப்பட்டது குகை. ஒரு நாற்காலியில் போர் வீரன் அணியக்கூடிய உடைகள், அணிந்துகொண்டு கழற்றி மாட்டிய நிலையில் வைக்கப்பட்டிருந்தன. வெகு நாள்களாக அவற்றை யாரும் எடுத்து உபயோகிக்கவில்லை என்பது, அவற்றில் படிந்திருந்த புழுதியும், அவற்றைச் சுற்றிச் சிலந்திகள் பின்னி இருந்த வலையும் சொல்லிற்று. நாற்காலியில் மாட்டி நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அந்த உடையின் முன்னால் போய் மணி நின்றுகொண்டு, ஒரு பக்கமாகத் தலையைச் சாய்த்து, அதைச் சில விநாடிகள் உற்றுப் பார்த்தது. வேகமாகத் தன் வாலை ஆட்டிற்று. சந்தோஷத்தோடு குரைத்தது. ஒவ்வொரு தடவையும் குகைக்கு வந்ததும் இப்படித்தான் செய்வது வழக்கம். ஏன் தெரியுமா? அந்த உடைகள் மணியின் எஜமான

னுடையவை. அவர் இறந்து பல வருஷங்களானாலும், அவர் இன்னும் அங்கே உட்கார்ந்திருப்பது போலவே எண்ணி மணி அந்த உடைக்குத் தன் மரியாதையைச் செலுத்துகிறது.

அந்த விசாலமான குகையில் என்ன இருந்தது தெரியுமா? பொற்காசுகள், தங்கக் கட்டிகள், வைரங்கள், மாணிக்கங்கள், பெரிய பெரிய தங்கப் பாத்திரங்களில் விதவிதமான ஆபரணங்கள், முத்துகள், பவழங்கள் எல்லாம் மூலைக்கு மூலை குவிக்கப் பட்டிருந்தன. பெட்டி பெட்டியாகத் தங்கக் காசுகள். பல தேசத்துப் பொக்கிஷங்களை எல்லாம் ஒன்றாகச் சேர்த்தாலும் அங்கிருந்த அத்தனைக்கும் ஈடாகா. இவ்வளவு புதையலும் யாருடையது தெரியுமா? இப்போதைக்கு இது மணியினுடையது தான்! இந்தப் புதையல் இருக்குமிடம் அதைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அதுதான் இந்தக் குகையின் காவலாளி. குகையை - அங்கு குவிக்கப்பட்டிருந்த பொருள்களை எல்லாம்- ஒரு முறை சுற்றிப் பார்த்துவிட்டு, மணி ஒரு மூலையிலிருந்த வெல்வெட் துணிகளின் குவியல்மீது போய்ப் படுத்துக்கொண்டது. கண்களை மூடிக்கொண்ட அது, சற்று நேரத்தில் தூங்கிவிட்டது.

இனி நாம் கந்தனைக் கவனிப்போம். மணி கொடுத்துச் சென்ற பவுனைத் திருப்பித் திருப்பிப் பார்த்துக்கொண்டிருந்த கந்தனின் மூளை வேலை செய்தது. 'முழுப்பவுன்! அவனுக்கே அவனுக்கு. இனி, திருவிழாவிற்குப் போக என்ன தடை? யார் என்ன சொல்வது? ஆனால், வீராயி சொல்லிவிட்டுப் போன வேலைகள்? ம்...அந்த வேலைகளை முடித்தாலுந்தான் அடிவிழப் போகிறது.' திருவிழாவிற்குப் போகவேண்டும் என்ற ஆசையில் வாங்கப் போகும் பூசை பெரிதாகப் படவில்லை அவனுக்கு. ஓடினான்; குடிசைக் கதவை மூடித் தாளிட்டான். அம்பு போலப் பாய்ந்து ஓடினான். அவர்கள் வருவதற்குள் திரும்பிவிட வேண்டும் என்ற முடிவோடு மாரியம்மன் தேர்த் திருவிழாவைப் பார்க்கக் கிளம்பிவிட்டான் கந்தன். அந்தப் பவுன் நாணயம் அவன் உள்ளங்கை வியர்வையோடு ஒட்டிக் கொண்டிருந்தது. மூச்சு வாங்க, வியர்வை வெள்ளமாக வழிந்தோட, தலைமயிர் காற்றில் பறக்க, நகரத்தை அடைந்தான் கந்தன். அடேயப்பா! என்ன கும்பல்! இவ்வளவு ஜனங்

கள் சேர்ந்திருந்ததை அவன் இதுவரை பார்த்ததே இல்லை. திருவிழாக்கடைகளும், ஜனக்கூட்டத்தின் ஆரவாரமும் அவனுக்கு ஆனந்தமாக இருந்தது. மிட்டாய்க்கடை, பட்டாணிக் கடை, பொம்மைக் கடை, குடைராட்டினம், அடேயப்பா!... கந்தனுக்கு எதைப் பார்த்து, என்ன வாங்குவது என்றே புரியவில்லை. திகைத்துப் போய்ச் சுற்றி வந்தான்.

நேரமாக ஆக பசி வயிற்றைச் சுண்டி இழுத்தது. ஒரு பெரிய பலகாரக்கடைக்குள் நுழைந்தான். அங்கு 'கமகம' என்று வாசனை வீசிக்கொண்டு விதவிதமான பட்சணங்கள் அடுக்கப் பட்டிருந்தன. கந்தனின் நாக்கில் ஜலம் ஊறிற்று. கடைக்குள் போய் உட்கார்ந்துகொண்டு, "ஐயா, அதோ மேல் தட்டில் உருண்டையாகச் சிவப்பாக இருக்கிறதே. அதில் இரண்டு கொண்டு வா. அப்புறம் இரண்டு போண்டா, நாலு வடை, இட்டிலி, தோசை எல்லாம் கொண்டுவா. எனக்கு ரொம்பப் பசி" என்றான் கந்தன்.

கடைக்காரன் கந்தனை ஏற இறங்கப் பார்த்தான். அவனுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை. கந்தனின் உடலிலோ கந்தல், அவன் கேட்பதோ பிரபுவின் தோரணை. "தம்பி, நீ கேட்கும் பலகாரங்களுக்கு என்ன பணம் ஆகும் தெரியுமா? ஐந்து ரூபாய்க்கு மேலே ஆகும். இங்கே யாரும் இனாமாகத் தரமாட்டார்கள். நீ ஒரு முழு ரூபாய்கூட உன் வாழ்க்கையில் பார்த்திருக்கமாட்டாயே" என்றான் கேலியாக.

"முழு ரூபாயென்ன, ஒரு முழுப் பவுனையே பார்த்திருக்கிறேன். இதோ இதில் எவ்வளவோ ஐந்து ரூபாய்கள் இருக்கின்றன. முதலில் பலகாரங்களைக் கொண்டா, சீக்கிரம். எனக்குப் பசி தாங்கவில்லை," என்று சொல்லித் தன் உள்ளங்கையில் அழுத்திவைத்திருந்த பவுனை மேஜைமீது 'டக்' என்று வீசி எறிந்தான். அது 'கிர்' என்று சுற்றி நின்றது. பவுனைக் கண்ட கடைக்காரன், கண்கள் பிதுங்கி வெளியே வந்துவிடுவது போல வியப்புடன் பவுனையும் கந்தனையும் மாறிமாறிப் பார்த்தான். சிறிது நேரம் அவனால் பேசவே முடியவில்லை. திகைத்துவிட்டான். இதுவரை அவன் கடையில் பவுனுக்கு பலகாரம் வாங்கியவர்களே கிடையாது.

''கொண்டாய்யா, எனக்குப் பசி உயிர் போகிறது'' என்று கந்தன் கத்தவுந்தான் கடைக்காரனுக்குச் சுய நினைவு வந்தது. ஓடோடிச் சென்று இட்லியும் தோசையும் போண்டாவும் வடையும் கொண்டுவந்து கந்தனுக்கு ஆசார உபசாரம் செய்தான்.

கந்தன் சாவகாசமாகப் பயமின்றி நன்றாக அனுபவித்துச் சாப்பிட்டான். அவன் வாழ்நாளில் இதுவரை இவ்வளவு நிம்மதியுடன் இவ்வளவு உயர்ந்த ஆகாரத்தைச் சாப்பிட்டதே இல்லை. வயிறு புடைக்கச் சாப்பிட்டான். எழுந்து நடக்க முடியாதபடி சாப்பிட்டான். கடைக்காரன் கந்தன் சாப்பிட்ட பலகாரங்களுக்குத் தாராளமாகவே பணத்தை எடுத்துக்கொண்டு மீதி ரூபாயைக் கந்தனிடம் கொடுத்தான். கந்தன் அதற்கு மேலும் இனாமாக ஒரு ரூபாய் கொடுத்துவிட்டு வெளியேறினான்.

கந்தன் ஆனந்தமாக நகர் முழுவதும் சுற்றினான். எல்லா வேடிக்கைகளிலும் கலந்துகொண்டான். என்னென்னவோ வாங்கினான். வீராயிக்கு ஒரு ஜதை வெள்ளிக்காப்பும் சங்கிலிக்கு ஒரு வெள்ளி வெத்திலைப் பெட்டியுங்கூட வாங்கினான் கந்தன். அவனுக்கு இருந்த ஆனந்தத்தில் அவர்கள் செய்த கொடுமைகளைக்கூட மறந்துவிட்டான்.

ஓர் இடத்தில் ஜனங்கள் கூட்டமாகக் கூடி இருந்தார்கள். கந்தன் அங்கு போய் எட்டிப் பார்த்தான். அங்கு ஒரு வித்தை காட்டுபவன் சொல்லிக்கொண்டிருந்தான். ''மகாராஜாக்களா, புண்ணியவான்களா! நீங்க எல்லாம் நிறையக் காசு கொடுத்தா உங்க கண்ணு முன்னாலே இந்த இரும்புக் கத்தியை விழுங்கிக் காட்டறேன். மந்திரமல்ல, தந்திரமல்ல, மாயமல்ல, கண்ணாலே பார்த்துக்கிட்டே இருங்க. புண்ணியவான்களே...! இந்த ஏழையோட அரைவயித்துக் கஞ்சிக்குக் காசு போடுங்க'' என்றான்.

இரண்டு காலணா, ஒரு அரையணா, அப்புறம் ஒரு காலணா- அவ்வளவுதான் அவனது விரித்த துணியில் விழுந்த காசுகள்; கூட்டமோ ஏராளமாகக் கூடி இருந்தது. எல்லோருக்கும் அவன் கத்தியை விழுங்குவதைப் பார்க்க ஆசைதான். ஆனால் காசு போடத்தான் மனமில்லை. அந்த வித்தைக்

காரனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. 'புண்ணிய வான்களே! தர்மராஜாக்களே...!' என்று கெஞ்சினான். ஆனால் இரண்டணாவிற்கு மேல் துணியில் சேரவில்லை.

கந்தன் பார்த்தான். 'டக்'கென்று இடுப்பில் கையைப் போட்டான். ஒரு முழு ரூபாயை எடுத்துச் சுண்டினான் துணியில். "நீ இதற்காகக் கத்தியை விழுங்கவேண்டாமப்பா.... உன்னைப் பார்த்தால் பாவமாக இருக்கு. போய்ப் பசியாறச் சாப்பிடு. போ!" என்று சொல்லி நகர்ந்தான் கந்தன். ஆனால் வித்தைக்காரன் கந்தனை விடவில்லை.

"இதோ ஒரு சின்ன மகாராஜா—ஆளு சின்னவரானாலும் மனசு பெரிசு, என் தர்மப் பிரபுவே—நீங்க போகக் கூடாது. முன்னாலே வாங்க இப்படி—உங்களை இந்தச் சனங்கள் எல்லாம் நல்லாப் பார்க்கட்டும்" என்று அழைத்தான். கந்தனுக்குத் தன்னைக் காட்சிப் பொருளாக்கிக்கொள்ளப் பிடிக்கவில்லை. ஆனால், வித்தைக்காரன் கந்தனின் கைகளைப் பிடித்துப் பலவந்தமாக இழுத்தான். கந்தனும் வேறு வழி இன்றி முன்னால் போக நகர்ந்தான்.

அதே சமயத்தில் இரண்டு உறுதியான கரங்கள் அவன் இரு தோள்களையும், பிடித்து அழுத்தி நிறுத்திற்று.



# புதிய வாழ்க்கை

திரும்பிய கந்தன் பயத்தினால் அலறிவிட்டான். அவன் உடல் நடுங்கிற்று. கையிலிருந்த காற்றாடியும் பட்சணப் பொட்டலங்களும் அவனை அறியாமல் கீழே விழுந்து சிதறின.

அப்படி அவன் நடுங்கும்படியாக அவன் கண்ட காட்சி என்னவாக இருக்கும்? அவன் கண்டு பயப்படும்படியான ஒரே ஆள் சங்கிலிதான். அவன் எப்படி இங்கு வந்தான் என்று திகைக்கிறீர்களா? திருவிழாக் கூட்டத்தோடு சங்கிலியும் வீராயியும் வேடிக்கை காட்டும் இடத்துக்கு வந்து சேர்ந்தார்கள். கந்தனைக் கண்டான் சங்கிலி. வித்தைக்காரன் துண்டில் ரூபாயைச் சுண்டிவிட்டு நின்ற காட்சியைப் பார்த்தான். முதலில் ஆச்சரியத்தால் திகைத்தாலும் ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது.

கந்தனை அப்படியே ஒரு கையால் தூக்கிப் பிடித்துக் குலுக்கினான். ''திருட்டுப் பயலே, எந்தச் சாமானை வித்து நீ திருவிழாவுக்கு வந்தே; உண்மையைச் சொல்லிப்போடு, இல்லே உன் முதுகுத் தோலை உரித்துப் போட்டுவேன்'' என்று பற்களை நறநறவென்று கடித்துக் கந்தனின் வெள்ளரிப் பிஞ்சுக் கன்னத்தை—பூப்போன்ற கன்னத்தைச் சிவக்க வைத்துவிட்டான் சங்கிலி.

"இல்லேய்யா, நான் ஒரு சாமானையும் விக்கல்லே. எனக்கு ...எனக்குப் பணம் கெடச்சுது. ஒரு பவுனு கிடைச்சுது. கண்டெடுத்தேன்." தேம்பித் தேம்பி அழுதுகொண்டே கெஞ்சினான் கந்தன். சங்கிலியையும் கந்தனையும் சுற்றிக் கூட்டம் கூடிவிட்டது. கந்தனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ராட்சதன் சங்கிலி அவனை மூர்க்கத்தனமாக அடித்துக்கொண்டிருந்தான். வீராயியும் தன் பங்குக்குச் செய்ய வேண்டியதை மறக்கவில்லை. கந்தன் புழுப்போலத் துடிப்பதைக் கூட்டத்திலிருந்த கல்நெஞ்சுக்காரர்கள் இரசித்தார்கள். பலருக்கு அது கஷ்டமாக இருந்தது. ஆனால் கந்தனை விடுவிக்க அவர்களுக்குத் தைரியமில்லை. ஏன் தெரியுமா? கந்தனின் உடைதான் காரணம். கந்தலாடைக் கந்தனுக்கு, ஏழ்மையே உருவான அந்தப் பையனுக்கு இவ்வளவு பணம் எப்படிக் கிடைத்தது? அதுவும் ஒரு பவுன்! பவுன் கீழே கிடக்குமா? இது கட்டுக்கதையோ என்று ஆராய்ச்சியில் இறங்கினார்கள் வேறு பலர்.

ஆனால், வித்தைக்காரனுக்கு இந்த அக்கிரமத்தைக் காணப் பொறுக்கவில்லை. தன்னால்—தனக்குத் தருமம் செய்ததனால் தானே அந்தப் பையனுக்கு இத்தனை கஷ்டம் என்பதை நினைத்த உடன் அவன் உள்ளம் வெடித்துவிடும் போலிருந்தது. கூட்டத்தை விலக்கிக்கொண்டு நேரே ஊர் அதிகாரியிடம் ஓடினான். அவரிடம் விவரமாக விஷயத்தைச் சொன்னான். உடனே அவரும் நாலு ஜவான்களுடன் புறப்பட்டுவிட்டார்.

குரங்காட்டி வித்தையைக் காணுவது போல ஜனங்கள் கூடி இருந்தார்கள். கந்தனைக் குரங்காக ஆட்டி வைத்துக் கொண்டிருந்தான் முரட்டுச் சங்கிலி.

"கொண்டாடா அந்த மீதிப் பணத்தை எல்லாம் இப்படி. திருட்டுக் கழுதே!" என்று அவன் முதுகில் ஒரு குத்துவிட்டு, இடுப்பிலிருந்த கந்தையை உருவி இழுத்தான் சங்கிலி. கலகலவென்று ரூபாயும் சில்லறையும் கீழே விழுந்து சிதறிற்று. அம்மணமாக்கப்பட்டிருந்த கந்தன் கதறினான், தன் கந்தையைக் கொடுக்கும்படி. ஆனால், சங்கிலியோ உருண்டு ஓடிய ரூபாய்களைப் பொறுக்குவதில் முனைந்திருந்தான்.

"சீ கழுதே, உனக்கு வெக்கம் வேறயா? அப்படியே அம்மணமா நில்லு" என்று தீர்ப்புக் கொடுத்தாள் வீராயி. அப் போது வித்தைக்காரன் கூட்டத்தைப் பிளந்துகொண்டு ஊர் அதிகாரியோடு உள்ளே நுழைந்தான்.

"இந்த இரண்டு இராட்சத ஜன்மங்களையும் இழுத்துக் கட்டுங்களப்பா!" என்று உத்தரவிட்டார் ஊர் அதிகாரி. வித்தைக்காரன் தன் மேல்துண்டைக் கந்தனுக்குக் கொடுத்துக் கட்டிக்கொள்ளச் சொன்னான். சங்கிலிக்கும் வீராயிக்கும் ஜவான்கள் விலங்கை மாட்டினார்கள். அதிகாரி அந்த இரண்டு இரக்கமற்ற பிசாசுகளையும் தன் விடுதிக்கு அழைத்துச் சென்றார்.

"அவன் எம் மவனுங்க. எம் மவனை நான் அடித்துக் கண்டிக்க எனக்கு உரிமை இல்லீங்களா? பய திருட்டுப் பய......" என்று கத்தினான் சங்கிலி. ஆனால், அதிகாரி கூச்சலைக் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை.

"டேய், மரியாதையாகப் பேசாமல் இரு. உன் மகனாக இருந்தால் நீ கொலை செய்யலாமா? அதற்கு உனக்கு உரிமை கிடையாது. அதுவும் தவிர, இந்த ஊர் வழக்கம் உனக்குத் தெரியுமல்லவா? குழந்தைகளை அடிப்பவர்களுக்குக் கடுமை யான தண்டனை என்று. அதுவும் நடுரோட்டில் அப் படியா போட்டு அடிப்பது? உங்கள் இருவருக்கும் ஜெயில் காத்திருக்கிறது" என்று சொல்லி ஜவானைக் கூப்பிட்டார். அடுத்த நிமிஷம் சங்கிலியும் வீராயியும் இரும்புக் கம்பி போட்ட அறையில் கொண்டுபோய் அடைக்கப்பட்டார்கள்.

சங்கிலியிடமிருந்து பறிமுதல் செய்த ரூபாய்களை எண்ணிக்கொண்டிருந்த ஊர் அதிகாரியின் முன்னால் போய் நின்றான் கந்தன். அவனுக்கு, சங்கிலியையும் வீராயியையும் ஜெயிலில் போட்டது பிடிக்கவே இல்லை. இவனை அவர்கள் தான் அடித்தாலும், தன்னால் அவர்கள் துன்பம் அனுபவிப் பதை விரும்பவில்லை அவன்.

"ஐயா, அவர்களை விடுதலை செய்ய மாட்டீர்களா? எனக்கு அவர்களை விட்டால் வேறு கதியே கிடையாதய்யா.

எனக்காக அவர்களை விட்டுவிடுங்களய்யா!'' என்று கெஞ்சினான் கந்தன். ஊர் அதிகாரி ஒரு கொழுத்த பருத்த மனிதன். கஷ்டமின்றிக் கவலையின்றி வளர்ந்திருந்தான். பெரிய தொந்தி; கழுகுப்பார்வை. அதுவும் பணத்தை அவர் பார்க்கும் பார்வையே தனி.

'கக் கக்' என்று சிரித்தார். சிரிக்கக்கூட அவரால் முடியவில்லை. அவ்வளவு பெரிய உடல். கந்தனைப் பார்த்த அவர் என்ன நினைத்தாரோ தெரியவில்லை. ''டேய் பயலே, நீ ஓடிப்போயிடு. ஆமா, நிக்காதே; நின்றால் உன்னைப் பிடித்து ஜெயிலில் தள்ளிவீடுவேன்'' என்றார்.

'எனக்குப் போக ஒரு இடமும் இல்லை, ஐயா. என்னையும் அவர்களோடு சேர்த்து அடைத்துவிடுங்கள்'' என்றான் கந்தன்.

''ஹி...ஹி...ஹீ...ஒரு இடமுமில்லாமலே உனக்கு ஒரு முழுப் பவுன் கிடைத்தது. போ, போயி எங்காவது இன்னொரு பவுன் கொண்டுவா. கொண்டுவந்து கொடுத்தால் அவர்களை விட்டுவிடுகிறேன். சும்மா உனக்கு இங்கே சோறு போட முடியாது, போ'' என்று விரட்டினார்.

சங்கிலி அடித்த அடியினால் நொந்துபோன உடல் வலிக்க ஆரம்பித்தது. தள்ளாடித் தள்ளாடி நடந்தான். கிடைத்த கொஞ்ச நேர சுகமெங்கே? அதற்குப் பட்ட துன்பம் எவ்வளவு? அப்பப்பா...இந்தச் சுகமே வேண்டாமென்று எண்ணியது புண்பட்ட மனம். ஊருக்கு வெளியே ஓர் ஆல மரத்தடியில் அப்படியே சோர்ந்து போய்ப் படுத்துவிட்டான் கந்தன்.

ஊர் அதிகாரி சங்கிலியிடம் இருந்த பணத்தைப் பிடுங்கிக் கொள்ளவே அவனை ஜெயிலில் போட்டார். எந்த விதமானாலும் பணம் கிடைத்தால் அவர் எதையும் செய்வார்.

கந்தன் கவலையால் புரண்டுகொண்டிருந்தான். உடல் வலி வேறு. இனி தன் கதி என்ன என்ற கவலை வேறு.

அடுத்த வேளைச் சாப்பாட்டிற்கு எங்கே போவது என்ற விசாரம் வேறு. கவலையோடு கண்மூடிப் புரண்டுகொண்டிருந்த கந்தனின் காலில் ஏதோ ஜில்லென்று பட்டது; குபீரென்று குதித்து எழுந்தான். ஒரு ஜ்வலிக்கும் வைரம். டால் வீசிக் கொண்டிருந்த அதை அவனால் பார்க்கவே முடியவில்லை. கண் கூசிற்று. பளபளக்கும் அந்த வைரத்தின் அருகே மணியும் நின்றுகொண்டிருந்தது.

''மணி ...மணி ...இங்கே எப்படி வந்தே? உனக்கு எப்படித் தெரிந்தது?'' அதை அப்படியே கட்டிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடினான் கந்தன். ''மணி, எனக்கு இவ்வளவு உயர்ந்த பொருள்களாகக் கொண்டுவந்து தருகிறாயே, உனக்கு இதெல் லாம் ஏது? மணி, நீ சொல்ல வேண்டாம். ஆனால் சமயத்தில் வந்து உதவும் உனக்கு நான் என்ன உதவி செய்யப் போகிறேன்'' என்று அதோடு கொஞ்சினான்.

மணி அவன் முகத்தை நக்கி முனகிற்று. அடுத்த நிமிஷம் குபீரென்று தோப்பிற்குள் ஓடி மறைந்துவிட்டது. கந்தன் கூப்பிட்டான். ஆனால், அது நிற்கவே இல்லை. அந்த வைரத்தை உருட்டி உருட்டிப் பார்த்தான். அதன் அழகு அபாரமாக இருந்தது. நகரத்துக்கு ஓடினான். நேரே சிங்கார வேலு செட்டியார் கடைக்கு வந்துதான் நின்றான். வைரத் தையும் பையனையும் பார்த்தார் செட்டியார். சந்தேகம்தான். வைரமோ விலை மதிக்கமுடியாதது. கொழுத்த லாபம் சம்பாதிக்கலாம் என்று அவர் மனம் தவித்தது. ஆர்ப்பாட்டம் செய்யாமல் பையனிடம் வைரத்தை வாங்கிக்கொண்டு அனுப்பி விட எண்ணினார். அவர் கொஞ்சம் நல்லவரும்கூட. ஆகவே, கந்தனின் கையில் நூறு பவுன் கொண்ட ஒரு பட்டுப் பையைக் கொடுத்து அனுப்பினார்.

கந்தன் லாப நஷ்டத்தைப்பற்றிச் சிந்திக்கவில்லை. நேரே ஊர் அதிகாரியிடம் ஓடினான். 'டக்'கென்று அவர் மேஜைமீது ஒரு பவுனை வைத்து ''அவர்களை விடுதலை செய்யுங்கள்'' என்றான். பவுனையும் கந்தனின் கையிலிருந்த பட்டுப் பையையும் தன் கண்களால் விழுங்கிக்கொண்டிருந்தார்,

அவர். கந்தன் துரிதப்படுத்தினான். பணத்திற்கு அடிமையான அதிகாரி சங்கிலியையும் வீராயியையும் ஜெயிலிலிருந்து வெளியே விட்டார். அவர்களோடு போகத் திரும்பிய கந்தனின் கைகளை ஊர் அதிகாரி பிடித்துக்கொண்டு, "தம்பி, உன்னை அவர்களோடு அனுப்ப மாட்டேன். அந்த அரக்கர்கள் உன்னைத் துன்பப்படுத்த இனி நான் இடந்தரமாட்டேன். உன்னை அவர்களோடு அனுப்புவதும் சட்ட விரோதம். உன்னை நான் அன்பாக நடத்துகிறேன். எனக்குக் குழந்தைகள் கிடையாது. நீ என் வீட்டோடு இருந்துவிடு" என்று அன்பொழுகப் பேசி அவனைத தூக்கிக்கொண்டார். கந்தன் வியப்பினால் திகைத்துத் திக்குமுக்காடிப் பேச முடியாமல் திணறினான். அதற்குள் சங்கிலியும் வீராயியும் ஊருக்கு வெளியே கொண்டுவிடப்பட்டார்கள்.

கந்தனுக்கு வியப்பிற்குமேல் வியப்புக் காத்திருந்தது. ஊர் அதிகாரி அவனைத் தன் குதிரை வண்டியில் வைத்துக்கொண்டு தன் வீட்டிற்குக் கூட்டிப்போனார். அவ்வளவு பெரிய பங்களாவை அவன் பார்த்ததே இல்லை.

"இதோ இது உன் அறை. இதற்குள் நீ உன் துணிமணி களை வைத்துக்கொள்ளலாம். ஹி .... ஹி ... எனக்கு ஏது துணிகள் என்று கேட்கிறாயா? நாளைக்குக் கடைவீதிக்குச் சென்று உனக்கு வேண்டியவைவெல்லாம் வாங்கலாம்" என்று அன்பொழுகப் பேசிக்கொண்டு போனார். கந்தன் பிரமை பிடித்துப்போய் நின்றான். அவனுக்கு என்ன பேசுவது என்றே தெரியவில்லை.

தனக்காக ஒரு தனி அறை; தனிக் கட்டில். 'அடேயப்பா! இந்த மெத்தைதான் எவ்வளவு மிருதுவாக இருக்கிறது' என்று மனத்துக்குள் சொல்லிக்கொண்டான் கந்தன். 'நான் இந்த உலகிலேயே மிக மிக அதிர்ஷ்டசாலியாகிவிட்டேன்' என்று நினைத்து மகிழ்ந்தது அவன் மனம். இந்த எண்ணம் வந்ததும் அவன் கையில் பிடித்துக்கொண்டிருந்த பவுன் மூட்டை கனப்பது போலிருந்தது கந்தனுக்கு.

''இந்தப் பையிலுள்ள பவுன்களை என்ன செய்வது, எங்கே வைப்பது? ரொம்பக் கனக்கிறதே'' என்றான். இந்த வார்த்தை எப்படி, எப்போது வரும் என்று காத்துக்கொண்டிருந்த அதிகாரியின் கண்களில் வஞ்சக ஒளி வீசிப் பிரகாசித்தது. ''தம்பி, இது உன் வீடு போல. இந்தப் பவுன் மூட்டையை அதோ சுவரிலுள்ள அந்தப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிடு. இதோ சாவி'' என்று சொல்லியபடி அவன் கையிலிருந்த பவுன் மூட்டையை வாங்கித் தாமே அதில் வைத்துப் பூட்டி விட்டுச் சாவியையும் அதிலேயே தொங்கவிட்டார். ''இப்போது இது ரொம்பப் பத்திரமாக இருக்கும்'' என்றார்.

கந்தனுக்கு ஆசார உபசாரம் நடந்தது. கந்தனின் கந்த லாடைகள் களையப்பட்டுப் புத்தம் புதிய ஜோரான உடைகள் கொடுக்கப்பட்டன. வேலைக்காரர்கள் கந்தனுக்கு ஸ்நானம் செய்து வைத்தார்கள். பலமான விருந்துச் சாப்பாடு வேறு.

கந்தனுக்கு நேரம் ஆக ஆகத் தூக்கம் கண்ணைச் சுற்றியது. உடலைத் தள்ளாட வைத்தது. அன்று பூராவும் என்ன அலைச்சல்! கந்தன் தன் மாடி அறைக்குப் போனான். மெத்தையில் அப்பாடா என்று போய்ப் படுத்தான். ஆகாயத்திலே மேகத்தின்மீது படுத்து மிதப்பது போல இருந்தது. தனக்கு வந்த அதிர்ஷ்டங்களெல்லாம் கனவல்லவே! அவனால் நம்பவே முடியவில்லை. அதிசய நாய் மணி; பவுன் நாணயம், வைரம், சங்கிலி, வீராயி—அவர்களிடம் பட்ட கஷ்டங்கள்... அப்பப்பா!

மெல்ல மெல்ல அவன் கண்கள் மூடின. தூக்கம் இந்த உலக நினைவை அழிக்க ஆரம்பித்தது. சிறிது நேரம் தன்னை மறந்து மயக்க நிலையில் கிடந்த கந்தன் திடீரென்று விழித்துக் கொண்டான். ஏதோ ஒரு சப்தம் வெகு தூரத்தில் கேட்பது போலிருந்தது. முதலில் கந்தன் அதைப் பொருட்படுத்தவில்லை. அசதியினால் படுக்கையை விட்டு எழுந்திருக்க மனமின்றிப் படுத்திருந்தான். ஆனால், சப்தம் வரவர அருகே மிக அருகே தொடர்ந்து கேட்கலாயிற்று. கந்தன் குபீரென்று குதித்து எழுந்தான். எதிரிலிருந்த ஜன்னல் வழியாகப் பார்த்

தான். இரவைப் பகலாக்கிக்கொண்டு நிலவு வீசிக்கொண் டிருந்தது. வீதியிலோ சந்தடி இல்லை. நன்றாக உற்றுப் பார்த் தான்; உன்னிப்பாக ஊன்றிக் கேட்டான். கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தான்.

அதோ ஜன்னலுக்கு நேரே, ஜன்னலை ஒட்டி ஓங்கி வளர்ந் திருந்த அந்த வேப்ப மரத்தில், அது என்ன? ஏதோ ஒரு ஜந்து தன் கால்களால் ஜன்னல் கதவைப் பிறாண்டித் திறக்க முயற்சி செய்கிறதே. கந்தனால் நம்பவே முடியவில்லை; அவன் மனம் ஆனந்தத்தால் உப்பிற்று. ஆம், அது மணியேதான்! அந்த அதிசய நாய்—அவன் அனுபவிக்கும் இந்தப் புதுவாழ்வை அவனுக்கு அளித்த அதே நாய்! பவுனையும் வைரத்தையும் அவனுக்குப் பரிசாகக் கொடுத்த மணியேதான்!

ஒரே தாவில் ஓடிப்போய் ஜன்னலைத் திறந்தான். அவனுக்கு இருந்த வியப்பில் அதைப் பெயர் சொல்லிக் கூப்பிடவோ கூச்சல் போடவோ நினைவில்லை. தவிர, சப்தம் போட்டு வீட்டிலுள்ளவர்களை எழுப்பவும் அவனுக்கு விருப்ப மில்லை.

"மணி...மணி...எப்படி மரத்து மேலே ஏறினாய்? நாய் களுக்கு மரமேறத் தெரியாது என்று கேள்விப்பட்டிருக் கிறேனே!" கந்தன் இரகசியம் பேசினான். ஆனால் மணி அவன் அருகில் நின்று குழையவில்லை. குபீரென்று ஜன்னல் வழியே உள்ளே குதித்து ஓடியது. அதன் கண்களில் பரபரப்பும் சந்தேகமும் வழிந்து நின்றன. அறையின் நடுவில் போய் நின்று, கம்பீரமாகச் சுற்று முற்றும் பார்த்தது. பிறகு கீழே முகர்ந்தது. கந்தனிடம் ஓடிவந்து அவன் பட்டுச் சொக்காயின் நுனியைத் தன் வாயால் கௌவிப் பிடித்தது. இழுத்துக்கொண்டு வந்து, மூலையில் கந்தன் அவிழ்த்து எறிந்திருந்த கந்தல் துணி களின் முன்னால் நிறுத்திற்று. பிறகு, அந்தத் துணியைத் தன் வாயால் எடுத்து அவன்முன் நீட்டியது.

"என்ன மணி, இந்தக் கந்தல் துணிகளையா அணிந்து கொள்ளச் சொல்லுகிறாய்? நான் பட்டுச் சொக்காய் போட்டுக் கொண்டிருப்பது உனக்குப் பிடிக்கவில்லையா?...மணி, இந்தப்

பாதி ராத்திரியில் எங்கே வரச் சொல்கிறாய்? எனக்குத் தூக்கம் வருகிறது, மணி" என்றான் கந்தன். ஆனால் மணியோ அவன் வார்த்தைகளைக் காதில் வாங்கிக்கொள்ளவே இல்லை. சுவரில் பதித்திருந்த பெட்டியினருகில் போயிற்று. தன் இரண்டு முன்னங்கால்களைத் தூக்கி அதன்மீது வைத்துக்கொண்டு நின்றது. பிறகு தன் வாயால் சாவியைக் கௌவிச் சுழற்றித் திறந்தது. பீரோவில் இருந்த பொன் முடிப்பை வாயில் கௌவி எடுத்துக்கொண்டு வந்து, கந்தனின் காலடியில் வைத்து 'ம், எடுத்துக்கொண்டு கிளம்பு' என்று சொல்லுவது போல அவனைப் பார்த்தது. கந்தனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதே சமயத்தில் கதவிற்குப் பின்னால் யாரோ இரண்டு பேர் பேசுவது கேட்டது. கோபத்துடன் ஆனால் மெதுவாக உறுமியது, மணி. கந்தன் உற்று கேட்டான். அவன் நெஞ்சு வேகவேகமாக அடித்துக்கொள்ள ஆரம்பித்தது. ஊர் அதிகாரி யாரோ ஒருவனுக்கு ஏதோ உத்தரவு கொடுத்துக் கொண்டிருந்தான்.



## திருடர்களிடம் சிக்கினான்

அறைக்கு வெளியே ஊர் அதிகாரி யாருடனோ பேசுவதைக் கந்தனின் காதுகள் உற்றுக் கேட்டன. அதிசய நாயான மணி கந்தனுக்குப் பக்கத்திலே நின்றுகொண்டிருந்தது.

"பயல் நன்றாகத் தூங்குகிறான். மெதுவாக உள்ளே போ. இதோ இந்தக் கத்தியால் அந்தப் பூட்டிய பெட்டியை நெம்பித் திறந்து, அதனுள்ளிருக்கும் பவுன் மூட்டையை அப்படியே தூக்கி கொண்டு வந்துவிடு. நாம் இருவரும் பங்குபோட்டுக் கொள்ளலாம். பயல் விழித்துக்கொண்டு ஏதாவது கூச்சல் போடுவான்போலிருந்தால் தயங்காமல் தீர்த்துக் கட்டிவிடு. விடியும்வரை நான் மூச்சுவிடவில்லை. காலையில் ஊரைக் கூட்டி, யாரோ திருடன் உள்ளே புகுந்து, பையனைக் கொன்று, பணத்தைத் தூக்கிக்கொண்டு போய்விட்டதாகக் கதை கட்டி விடுகிறேன். அதற்குள் நீ வெகுதூரம் போய்விடலாம்."

இதற்குமேல் அவர்களுடைய சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டு அங்கு நிற்கக் கந்தன் என்ன முட்டாளா? பட்டுச் சொக்காயை அவிழ்த்து எறிந்தான். கந்தல் துணியை எடுத்து அணிந்துகொண்டான். பவுன் மூட்டையை எடுத்துக் கொண்டான். மின்னல் வேகத்தில் ஜன்னல் வழியே மரத்தில்

தொத்திச் சரசரவென்று கீழே இறங்கினான். மணியும் அவனைத் தொடர்ந்து வந்தது.

கந்தன் ஓடினான்; மிகவேகமாக ஓடினான். கையிலே பவுன் மூட்டை இருந்தது. மணி, அவன் பின்னாலேயே தொடர்ந்து ஓடி வந்தது. நகரத்தின் எல்லைக்கு வந்து நின்றான் கந்தன். அவனுக்கு மூச்சு வாங்கியது. ''மணி...உனக்கு நான் எப்படி என் நன்றியைத் தெரிவிப்பது? இந்த உலகத்தில் நீதான் எனக்கு அப்பா, அம்மா எல்லாம். மணி, நான் இனி எங்கே போவது? மறுபடி சங்கிலியிடமே திரும்பிப் போய் விடட்டுமா?'' என்று கேட்டான், அதன் கழுத்தை கட்டிக்கொண்டே.

மணி நாக்கைத் தொங்கவிட்டபடி 'கூடவே கூடாது' என்பது போலப் பலமாகத் தலையை ஆட்டிற்று. மணிக்கு எதுவும் புரியும். ஆனால் பேசமட்டும் வராது. இப்போது மணி கந்தனின் கந்தல் துணியைக் கௌவி இழுத்தது. பிறகு முன்னால் வேகமாக ஓடியது. என்ன ஆனாலும், அது எங்கு கூட்டிப்போனாலும் மணியே கதி என்று அதைப் பின் தொடர்ந்து போனான் கந்தன். மணியோ அவனை வெகுதூரம் கூட்டிச் சென்று, கடைசியில் நீலவேணி நதியின் கரைக்கு வந்து நின்றது. தூரத்திலிருந்ததைக் கந்தன் பார்த்தான். சுழித்தோடும் நதியிலே ஒரு குடிசை மிதப்பது போலிருந்தது. அருகே சென்று பார்த்த போது அது குடிசையல்ல, படகு வீடு என்பதை அறிந்தான் கந்தன். அதன் பலகைச் சுவர்களுக்கு விதவிதமான வர்ணம் பூசி, அந்தப் படகு வீடு பார்க்க மிக அழகாக இருந்தது.

கரையோரத்து மரம் ஒன்றில் கட்டப்பட்டிருந்த அதில் மணி தாவிக் குதித்து ஏறியது. கந்தனும் அதைத் தொடர்ந்து அந்தப் படகினுள் குதித்தான். மணி தன் முகத்தால் அந்தப் படகு வீட்டின் கதவை முட்டித் தள்ளித் திறந்தது. அதனுள்ளே எட்டிப் பார்த்த கந்தன், ஆச்சரியத்தினால் அப்படியே பிரமித்து விட்டான். ஏன் தெரியுமா? அரண்மனைக்குள்ளே சிங்காரிக்கப்பட்ட அறையைப் போல அந்தப் படகு வீட்டின் உட்புறம் காட்சியளித்தது. பட்டு மெத்தைகள், நாற்காலிகள், திண்டுகள் எல்லாம் இருந்தன.

''வா, தாராளமாகத் தயங்காமல் தைரியமாக உள்ளே வந்து இந்தப் பட்டு மெத்தையில் படுத்துக்கொள்'' என்று

சொல்லுவதுபோல இருந்தது, மணி பார்த்த பார்வை. கந்தன் பேசாமல் உள்ளே நுழைந்து கட்டிலில் உட்கார்ந்தான். அவன் உடல் வலி, அசதி அவனையும் அறியாமல் அதில் படுக்கும்படி செய்துவிட்டது. மூலைக்கு மூலை வைக்கப்பட்டிருந்த பூத்தொட்டிகளிலிருந்து கம்மென்ற வாசனை வந்தது. கந்தன் களைத்துப்போய் தன்னை மறந்து தூங்க ஆரம்பித்தான். அவன் தூங்கும்வரை மணி அங்குக் காத்திருந்தது. பிறகு, மெதுவாக ஓசைப்படாமல், கந்தனின் தூக்கத்தைக் கலைக்காமல் வெளியே வந்து, மறுபடி தன் முகத்தால் கதவை மூடிவிட்டுப் படகிலிருந்து கரையில் குதித்துக் காட்டிற்குள் ஓடி மறைந்தது.

கந்தனைப் பேராபத்திலிருந்து காப்பாற்றிவிட்டோம் என்ற நிம்மதியோடு தன் இரகசியக் குகையில் படுத்துத் தூங்க ஆரம்பித்தது மணி. ஆனால் பாவம், நதியில் மிதக்கும் படகைப் பற்றிய உண்மை அதற்குத் தெரியாது. நதியின் நீரோட்டத்தில் இழுப்பு அதிகம் என்றோ, படகு கட்டப்பட்டிருக்கும் கயிறு நைந்துபோன பழங்கயிறு என்றோ அதற்குத் தெரியுமா?

மிதந்துகொண்டிருந்த படகிலே கந்தன் தூங்கினான். நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தான். அவனுக்கு இந்த உலக நினைவே இல்லை. நடுஇரவு, நல்ல நிலா. ஆற்றிலோ இழுப்பு அதிகம். காற்று வேறு. படகு இப்படியும் அப்படியும் காற்றினால் ஆடி அசைந்தது. ஆனால் இதற்கெல்லாம் கந்தன் எழுந்திருக்கவில்லை. அந்த ஆட்டம் அவனுக்குத் தொட்டில் ஆட்டுவதுபோலிருந்தது. படகு வேகமாக ஆடிற்று. படகு கட்டப்பட்டிருந்த கயிற்றின் 'புரி' ஒவ்வொன்றாகப் பிரிந்து 'பட்பட்' என்று அறுந்துகொண்டே வந்தது. நதியில் அத்தனை இழுப்பு. ஒரே ஒரு நூல் கயிற்றின் பிணைப்பிலேதான் படகு ஊசலாடிக்கொண்டிருந்தது. அந்தோ, அதுவும் அறுந்தது! கயிறு முழுதும் அறுத்துக்கொண்டதும் படகு ஆற்றின் போக்கிலே அதன் வேகத்தோடு இழுத்துச் செல்லப்பட்டது. கட்டுப்படுத்துவாரின்றி ஆற்றிலே படகு ஆடி ஆடிப் போய்க் கொண்டிருந்தது. கந்தனுக்கு அதெல்லாம் ஒன்றுமே தெரியாது.

இப்படியே இரவு முழுவதும் படகு தன்னிச்சையாகப் பிரயாணம் செய்து, காலையில் ஒரு காட்டின் கரை ஓரத்தில்

சேற்றில் புதைந்து நின்றது. அது பயங்கரமான காடு. அங்கு திருடர்கள் பதுங்கி வாழ்ந்து வந்தார்கள்.

நன்றாக விடிந்துவிட்டது; படகு ஒதுங்கிய கரை அருகே சற்றுத் தொலைவில், திருடர் கூட்டம் ஒன்று தங்கள் காலை ஆகாரத்தை முடித்துக்கொள்ளுவதில் முனைந்திருந்தது. அவர்களுள் ஒருவன் கரையோரத்தில் ஒதுங்கியுள்ள அலங்காரப் படகைப் பார்த்துவிட்டான்.

''அண்ணே, அண்ணே! ஏதோ ஆபத்து. நம்மை யாரோ பிடிக்க வாராங்க'' என்று பரப்பரப்புடன் ஓடிவந்தான் அவன். எந்த நிமிஷமும் அபாயத்தை எதிர்பார்க்கும் திருடர்கள் அவர்கள். உடனே எல்லோரது கவனமும் அந்த உல்லாசப் படகின் மீது திரும்பியது. ஒவ்வொருவரும் தங்கள் இடையிலுள்ள கத்தியை உருவிக்கொண்டு, பயங்கலந்த பார்வையுடன் படகையே பார்த்துக்கொண்டு நின்றனர். அதிலிருந்து போர் வீரர்கள் இறங்கப்போவதை எதிர்பார்த்தனர். ஐந்து நிமிஷமாயிற்று. ஒன்றும் நடக்கவில்லை. படகிலிருந்து யாரும் வெளிவரவில்லை. படகு நகரவும் இல்லை. திருடர்களின் மனம் படபடவென்று அடித்துக்கொண்டிருந்தது.

திருடர் தலைவன் இருளன் தைரியமாக அடிமேலடி வைத்துப் படகை நோக்கி முன்னேறினான். மற்றவர்களோ அவனது ஒவ்வோர் அசைவையும் வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டே நின்றிருந்தனர். ஒரு சிறு சப்தமும் அவர்களை அப்போது கதிகலங்க வைத்திருக்கும். இருளன் படகை நெருங்கி, அதில் தாவி ஏறினான். அப்போதுங்கூட ஏதும் நடக்காதது அவர்களுக்கு வியப்பாக இருந்தது. இருளன் மெள்ளப் படகு வீட்டின் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான். அழகான அறை. விலை மதிப்புள்ள அலங்காரப் பொருள்கள் நிறைந்த சிங்கார அறை. ஆனால் அதில் யாருமே இல்லாதது, இருளனுக்கு வியப்பினும் வியப்பாக இருந்தது. படகிலிருந்தவாறே தன் சகாக்களைச் சைகை செய்து கூப்பிட்டான்.

''வாங்கடா, நம்ப என்னவோன்னு பயந்தோமே, இதிலே யாருமே இல்லே.'' அடுத்த நிமிஷம் திருடர் கூட்டம் படகில்

ஏறியது. அலட்சியமாகக் காலால் எட்டி உதைத்துக் கதவைத் திறந்து உள்ளே புகுந்தான் இருளன். அதற்குள் இன்னொரு அறை இருப்பது அப்போதுதான் தெரிந்தது. மறுபடி பயம். கத்தியை முன்னால் நீட்டியபடி அந்த அறைக்கதவையும் தள்ளினான்.

அடுத்த விநாடி இருளன் இரண்டடி பின்வாங்கினான். வியப்பினால் ஏற்பட்ட பிரமை. அந்த அறைக்குள் அவன் கண்டது என்ன? அந்த அறையின் தரை எல்லாம் 'பளிச்பளிச்' என்று ஒளி வீசும் பவுன் காசுகள் இறைந்து கிடந்தன. கட்டிலிலே கந்தன் தன்னை மறந்து தூங்கிக்கொண்டிருந்தான். தூங்கும் போது அவன் கையிலிருந்த பவுன் மூட்டை கீழே விழுந்து அதிலிருந்த பவுன் காசுகள் அறைமுழுதும் உருண்டு ஓடி இருக்கின்றன. பொற்காசுகளைக் கண்ட ஆனந்தத்தில் திருடர்கள், கந்தன் படுத்திருப்பதைக்கூட கவனிக்கவில்லை. சிதறிக் கிடந்த பவுன் காசுகளைப் பொறுக்க ஆரம்பித்துவிட்டார்கள்.

சப்தம் கேட்டுக் கண் விழித்தான் கந்தன். கண்களைக் கசக்கிக்கொண்டான். ''யாரப்பா நீங்கள்? இது என்ன? இதெல்லாம் என்னுடைய பவுன்'' என்றான் கந்தன். ஒன்றும் புரியவில்லை அவனுக்கு. அப்போதுதான் திருடர்களும் புதுக் குரல் கேட்டுத் திடுக்கிட்டுக் கந்தனைத் திரும்பிப் பார்த்தனர்.

கந்தனின் தோற்றம் இருளனுக்குச் சிரிப்பு மூட்டியது. 'கடகட' வென்று சிரித்துவிட்டு, ''தம்பி, நீ யார்? உன் பெயர் என்ன?'' என்று சாவகாசமாகக் கேட்டான். உண்மையைக் கந்தன் சொன்னான்.

''தூங்குவதற்காக இதில் வந்து படுத்தேன். ஆனால் யாருடைய படகு என்று தெரியாது.''

''படகு யாருடையது என்று தெரியாதபோது இந்தப் பவுனைப்பற்றி நீ ஏன் கேட்கிறாய்?''

''ஏனா, இது எனக்குச் சொந்தம்; வைரத்தை விற்று வந்த பவுன்.''

"என்ன, வைரமா!" எகிறிக் குதித்தான் திருடன்.

"ஆமாம், வைரமேதான். ஜுவலிக்கும் வைரம். எனக்கு மணி கொடுத்தது."

கந்தன் சொல்வதிலே ஏதோ விஷயம் இருக்கிறது என்று யூகித்துக்கொண்டான் இருளன். "மரியாதையாக உண்மை பூராவையும் சொல்லிவிடு. சரியாக உடம்பை மூடிக்கொள்ளக் கூடத் துணி இல்லாத உனக்குப் பவுனாவது, வைரமாவது! உனக்கு வைரம் எப்படிக் கிடைத்தது, அதைச் சொல்லிவிடு" என்று உறுமினான் இருளன்.

கந்தன் எப்போதுமே உண்மை பேசுபவன். அதனால் நடந்தது அவ்வளவையும் ஒன்றுவிடாமல் சொல்லிவிட்டான். கந்தன் சொன்ன கதையைக் கேட்டுத் திருடர்களின் கண்கள் பேராசையால் பளபளத்தன. இருளன் கந்தனின் தோள்களைப் பற்றிக் குலுக்கி ஆவலுடன், "அந்த நாய் இதையெல்லாம் எங்கே இருந்து கொண்டுவருகிறது தெரியுமா?" என்று கேட்டான்.

"தெரியாது. ஒரு தடவை அதைப் பின்தொடர்ந்து போகலாமோ என்று நினைத்தேன். ஆனால் அது மிக வேக மாக ஓடி மறைந்துவிட்டது" என்றான் கந்தன்.

"அண்ணே, நான் நினைக்கிறேன், இந்த நாய் யாரோ ஒரு தனவந்தர் வீட்டு நாய். அவர் கிட்டே ஏராளமான புதையல் இறைந்து கிடக்கவேண்டும். இந்த நாய் அதைக் கொணர்ந்து இந்தப் பயகிட்டே கொடுக்குது. அந்தப் புதை யலை நாமே கொள்ளையடிச்சுட்டா என்னா?" என்று ஒரு திருடன் தன் அபிப்பிராயத்தை வெளியிட்டான்.

"ஆனால் உங்களுக்கு அந்தத் தனவந்தர் வீடு தெரி யாதே" என்றான் கந்தன். அவனுக்கு இவர்களைச் சிறிதும் பிடிக்கவில்லை. இருளனோ சிந்தனையோடு தன் குத்துவாளைச் சுவரில் வீசி வீசிக் குறி பழகிக்கொண்டே, "ஏன் எங்களுக் குத் தெரியாவிட்டால் உன் நாய்க்குத் தெரியும். உன்னால் நாயை வரவழைக்க முடியும். நீ எங்களோடு காட்டுக்குள் வர வேண்டும்; நீ மணியைக் கூப்பிடவேண்டும். மணி வந்ததும்

நாங்கள் பிறகு ஆகவேண்டியதைப் பார்த்துக்கொள்ளுகிறோம்'' என்றான்.

கந்தன் இதைக் கேட்டுப் பதறிப்போனான். ''என்ன, என் மணியை நீங்கள் பிடிக்கவா? முடியாது, முடியவே முடியாது. உங்களுக்கு உதவவே மாட்டேன்'' என்று கத்தினான் கந்தன். அவன் உடல் ஆத்திரத்தால் ஆடியது.

''முடியாதா?'' அப்படியே கந்தனின் கழுத்தைப் பிடித்துத் தூக்கினான் இருளன். ''எங்கள் கத்திகள் எல்லாம் உன் உடலில் பாயும். உன் உடல் இந்த நதியிலுள்ள முதலைகளுக்கு ஆகாரமாகும். ஆமாம்'' என்றான் இருனன். அவனைப் பார்க்கவே பயரங்கரமாக இருந்தது.

கந்தனின் உடல் வெடவெட என்று நடுங்கிற்று. கந்தனின் சம்மதத்துக்காகத் திருடர்கள் காத்திருக்கவில்லை. அவன் கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டினார்கள். படகிலிருந்து அவனைக் கரைக்குக் கொண்டுவந்தார்கள். ஒருவன் கயிற்றின் முனையைப் பிடித்துக்கொண்டான். கந்தன் முன்னால் நடக்க, அவன் இரண்டு விலாப்புறத்திலும் இருவர் கத்தியை நீட்டிக் கொண்டு நடந்தனர். கந்தன் நாயைப் போல இழுத்துக் கொண்டு போகப்பட்டான். அவன் மனம் பட்ட பாடு சொல்லி முடியாது. இப்படி அப்படி நகர்ந்தால் விலாவில் கத்தியின் முனை சுரீர் என்று குத்தியது. திரும்பினாலோ கழுத்துக் கயிற்றைச்சுண்டினார்கள். என்ன செய்வான், பாவம்! பேசாமல் தவிக்கும் உள்ளத்தோடு நடந்தான். நடந்து நடந்து கடைசியில் நடுக்காட்டிற்கு வந்து சேர்ந்தார்கள்.

''அண்ணே, போதும். பயலைவிட்டு அந்த நாயைக் கூப்பிடச் சொல்லுங்கள்'' என்றான் திருடர்களுள் ஒருவன்.

''டேய் பயலே, கூப்பிடு... பலமாகக் கூப்பிடு, உன் நாயை...ம்'' என்று குத்தினான் கத்தி முனையால் இருளன்.

கந்தன் பேச நினைத்தான். வார்த்தைகள் தொண்டைக் குள்ளேயே அமுங்கிப்போயிற்று. வாய் உலர்ந்து நாக்கு

மேலண்ணத்தில் ஒட்டிக்கொண்டது. நாக்கு இரண்டு மடங்கு கனத்துவிட்டதுபோலிருந்தது கந்தனுக்கு.

"சீக்கிரம் கூப்பிடு, ம் சத்தமாகக் கூப்பிடு; பலமாகக் கத்து...ம்" என்று மிரட்டினான் இருளன். கத்திக் குத்து தாங்காமல் கந்தன் வேதனையோடு, வெறுப்போடு "மணி... மணி" என்று ஈன ஸ்வரத்திலே தன் அருமை நாயை அழைத்தான்.

"மணி...மணி" கந்தனின் குரல் காட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் அலை அலையாக மிதந்து சென்று பரவியது. அந்தக் குரலில் ஏக்கமும் பயமும் கலந்திருந்தன. கத்துவதை நிறுத்தினால் திருடர்கள் கந்தனை இம்சித்தார்கள். "மணி... மணி ஏ...மணி" பல தடவை உள்ளம் வெடிக்கக் கத்திய பிறகு திடீரென்று அருகிலுள்ள செடிகளில் சலசலப்பு ஏற்பட்டது. பரபரப்புடன் திருடர்கள் பார்வை நாலுபக்கமும் சுழன்றது. ஆனால், மணி அவர்களுக்குமுன் திருடர்களைக் கவனித்துவிட்டது. சட்டென்று நழுவிவிடப் பார்த்தது. ஆனால் அதற்குள் இருளன் மணியைப் பார்த்துவிட்டான். உடனே ஒருவன் பின்பக்கத்து வழியாக வந்து, அதன் கழுத்துக்கு நேராக ஒரு சுருக்கிட்ட கயிற்று வளையத்தை தொங்கவிட்டான். கந்தனின் உடல் பதறியது.

"மணி மணி...ஜாக்கிரதை! அதோ உன் கழுத்துக்கு கயிறு" என்று கத்தினான் கந்தன். அவன் குரலைக் கேட்ட மணி குபீரென்று தாவி முன்னால் வந்தது. அதே சமயத்தில் கயிற்றுச் சுருக்கு அதன் கழுத்தை நெருக்கிவிட்டது. அதற்குள் இன்னொருவன் வேறொரு சுருக்குக் கயிற்றை மாட்டி மறுபக்கத்தில் இழுத்தான். இரண்டு பேரும் இரு பக்கங்களிலும் வலுவாகப் பிடித்து இழுக்கவே, கம்பீரமான அந்த நாய்க்கு மூச்சுத் திணறி, நாக்கு வெளியே தொங்க, கண்கள் பிதுங்க அவஸ்தைப்படலாயிற்று. இப்போது மணியினால் ஒன்றுமே செய்ய முடியவில்லை.

கந்தனுக்கோ, துக்கம் நெஞ்சை அடைத்தது. உள்ளம் விண்டுவிடுவது போலத் தவித்தான். "என் மணியைக்

கொல்லாதீர்கள். அதை வதைக்காதீர்கள்'' என்று வெறி பிடித்தவன்போலக் கத்திக்கொண்டு திமிறியபடி மணியினிடம் ஓடினான். தன் கழுத்தில் கட்டப்பட்டிருக்கும் கயிற்றைப் பற்றியோ, விலாவிலே சதையைத் தொட்டுக்கொண்டிருக்கும் கூரான கத்தியைப்பற்றியோ அவனுக்கு நினைவில்லை. தன் அவஸ்தையை மறந்தான். தன் நாலுகால் நண்பனின் நிலையைக் கண்டு பதறிப்போய்விட்டான் கந்தன்.



## கந்தன் கைதியானான்

திமிறிக்கொண்டு ஓடும் கந்தனின் காலைத் தட்டிவிட்டான் இருளன். கந்தன் தடாலென்று ஒரு புதரில் போய் விழுந்தான். விம்மி விம்மி அழும் கந்தனின் தலையைத் தடவியபடியே இருளன் கிண்டலுடன் சொன்னான்:

"தம்பி, பயப்படாதே; உன் திருட்டு நாயை நாங்கள் கொல்லவே மாட்டோம். அது எங்களுக்குப் பெரிய அதிர்ஷ்டத்தைக் கொடுக்கப்போகிறது. உனக்குத் திருடிக்கொண்டு வந்து தரும் அந்தப் புதையல் இருக்குமிடத்தை நாங்கள் அறிந்துகொள்ள வேண்டாவா? ஹி ஹி ஹி!" என்று விகாரமாகச் சிரித்தான் இருளன். "உன் நாய் நல்ல நாய். அருமையான நாய். டேய், அதன் சுருக்கைக் கொஞ்சம் தளர்த்துங்களடா, பயல் பாவம், தன் நாய்க்காக அழுகின்றான்" என்று உத்தரவு தரவே, திருடர்கள் மணியின் கழுத்தை இறுக்கி இருந்த கயிற்றைத் தளர்த்தினார்கள். இருளன் மணியைத் தாஜா செய்ய எண்ணி, அதன் முகத்திற்கு நேரே கை நீட்டினான். அடுத்த நிமிஷம் அலறிக்கொண்டு துள்ளிக் குதித்துத் துடித்தான். அவனுடைய கை விரல்களிலிருந்து இரத்தம் சொட்டலாயிற்று. மணி தன் பற்களை இருளனின் விரல்களில் பதித்துவிட்டது.

இருளனுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. உடைவாளை உருவி மணியை வெட்ட ஓடினான். ஆனால், ஏதோ நினைத்துக்

கொண்டவனாக, "இரு இரு, உன்னால் இப்பொழுது காரியம் ஆகவேண்டி இருக்கிறது. அந்தப் புதையலை நீ காட்டிய பிறகு உன்னைக் கண்டதுண்டமாக வெட்டிப்போடுகிறேன் பார்" என்று உறுமியபடி கைக்காயத்திற்குப் பச்சிலை வைத்துக் கட்டிக்கொண்டான்.

கந்தன் தன் அருமைத் தோழன் மணியைப் பார்த்தான். மணியின் பளபளக்கும் கண்களில் ஆத்திரமும் அலட்சியமும் கலந்திருந்தன. மணி பலே நாய்! அதற்கு நடக்கப்போவது தெரியும்; அதிலிருந்து தப்பித்துக்கொள்ளவும் தெரியும். திருடர்கள் மறுபடி மணியின் கழுத்துச் சுருக்கை இறுக்கினார்கள். ஆனால் அதன் அருகே நெருங்க யாருக்கும் துணிவில்லை.

"நல்ல நாயல்லவா நீ—போ, போ, உன் எஜமானின் வீட்டுக்குப் போ" என்று நயமாக, அன்பாக உத்தரவிட்டான் இருளன். மணி அவர்களை ஒரு நிமிஷம் முறைத்துப் பார்த்து, பிறகு ஏதோ தீர்மானத்திற்கு வந்தது போலக் காட்டின் ஒரு பக்கமாக வாலை ஆட்டிக்கொண்டு வேகமாக நடந்தது. திருடர்களுக்கு ஓரே ஆனந்தம். எல்லோரும் மணியைப் பின்தொடர்ந்து வேக வேகமாக ஓடினார்கள். இந்தச் சமயத்தில் கந்தன் மெதுவாக நழுவ நினைத்துப் பின்தங்கினான். ஆனால் அவன் எண்ணம் நிறைவேறாது தடுத்துவிட்டான் இருளன். கந்தனின் காதைத் திருகி அவனை முன்னால் தள்ளினான். மணி திரும்பிப் பார்க்காமல் போய்க்கொண்டே இருந்தது. காட்டின் நடுவே வந்ததும் பெரிய பெரிய மரங்களும் புதர்களும் நிறைந்த பாதை—கொடிகள் பின்னப்பட்டு மனிதர் காலடியே படாத கானகத்தின் வழியே அவர்களை அழைத்துச் சென்றது மணி. திருடர்கள் ஒருவரை ஒருவர் மகிழ்ச்சியோடு பார்த்துக்கொண்டார்கள். நினைக்க முடியாத பெரிய புதையலை அடையப் போவதாக அவர்கள் உள்ளம் கனவு கண்டுகொண்டிருந்தது.

முடிவாக மணி, நெருக்கமான புதர் மண்டிய அந்தக் காட்டில் ஓர் இடத்தில் நின்றது. அந்த இடம் சற்று விசாலமாக இருந்தது. எதிரில் சுவர் போன்ற ஒரு பாறை. அதில் ஒரு குகை. மணி தன் முகத்தை அந்தக் குகைக்கு நேராக நீட்டி

'இதுதான் என் எஜமானரின் குகை' என்பது போல விறைப்பாக நின்று இருளனைப் பார்த்தது.

''இதுவா?......அடேய், இதன் எஜமானனும் நம்மைப் போலத் திருடன்தான் போலிருக்கிறது, வாருங்கள்'' என்று குகைக்குள் நுழைய முயன்றார்கள் திருடர் கூட்டத்தினர். தங்கம், வெள்ளி, முத்து, பவழம், மாணிக்கம் - இவை கொட்டிக் குவிக்கப்பட்டிருக்கும் புதையலைக் காணப்போகிறோம் என்ற மகிழ்ச்சி அவர்களுக்கு. அதே சமயத்தில் மணி தன் பலத்தை எல்லாம் ஒன்றுசேர்த்துக் கயிற்றை ஒரு தடவை சுண்டி இழுத்தது. புதையலின் கனவில் மூழ்கி இருந்த அவர்களின் கையிலிருந்த கயிறு, மணி இழுத்த வேகத்தில் நழுவி வந்துவிட்டது. அடுத்த விநாடி மணி விடுதலை அடைந்தது.

குபீரென்று மின்னலைப் போலப் பாய்ந்து ஓடிக் கந்தனின் அருகில் வந்தது. அது கந்தனோடு பேசவில்லை, குழையவில்லை; வாலைக்கூட ஆட்டவில்லை. பின் என்ன செய்தது? கந்தனின் இரண்டு கால்களுக்கும் இடையே புகுந்து, அவனைத் தன் முதுகில் உட்கார வைத்துக்கொண்டு, குதிரையைப் போல வெகு வேகமாக ஓடியது. இத்தனையும் ஒருவிநாடியில் நடந்து விட்டது. கந்தனுக்கோ நடந்ததைப் புரிந்துகொள்ளச் சில நிமிஷங்களாகியது.

மணி ஓடிய வேகத்தில் கந்தன் அதன் முதுகின்மேல் தடுமாறி விழுந்தான். ஆனால், சட்டென்று அதன் கழுத்தைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டுவிட்டான். குதிரைச் சவாரியைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள், பார்த்திருப்பீர்கள். கந்தன் நாய்ச் சவாரி செய்தான். மணி அவ்வளவு பலமுள்ள நாய். அது நிற்கவில்லை. நாலு கால் பாய்ச்சலில் கந்தனைச் சுமந்து கொண்டு ஓடியது.

குகைக்குள் நுழைந்த திருடர்களின் கதி என்ன ஆயிற்று தெரியுமா? உள்ளே நுழைந்த சில விநாடிகளுக்கெல்லாம் பயங்கரமான உறுமலும் விகாரமான கூச்சலும் காட்டையே கிடுகிடுக்க வைத்தது. மணி அவர்களுக்குக் காட்டியது புதையலுள்ள குகையல்ல. பயங்கரமான கரடிகள் வசிக்கும் குகை

இருளனை ஒரு பெரிய கரடி தன் கால்களால் நன்றாகக் கட்டிப் பிடித்துக்கொண்டது. இன்னொரு பெரிய கரடி வெகுவேகமாக மற்ற திருடர்களைத் துரத்தியபடி வந்துகொண்டிருந்தது. அதைக் கண்டு திருடர்கள் போட்ட கூக்குரல் காடெங்கும் எதிரொலித்தது. அந்தப் பெரிய இராட்சதக் கரடிகளிடமிருந்து திருடர்களால் தப்ப முடியவில்லை நாலு பக்கமும் அடர்ந்த புதர்கள், ஓடவோ வழி இல்லை. கரடிகள் அவர்களை ஒவ்வொருவராகப் பிடித்துக் கீழே மோதி உருட்டி விளையாடின.

கந்தன் மணியின் முதுகிலிருந்தபடியே திரும்பிப் பார்த்தான். அந்தக் கோரக் காட்சியை அவனால் பார்க்க முடியவில்லை. வரவரத் திருடர்களின் அலறலும் கரடிகளின் உறுமலும் குறைந்துகொண்டே வந்து கடைசியில் எங்கும் நிசப்தம் நிலவியது. மணி தன் ஓட்டத்தை நிறுத்தாமல் போய்க்கொண்டிருந்தது. வெகுதூரம், வெகுநேரம் ஓடிவந்து, கடைசியில் ஓர் ஓடையின் கரையில் கந்தனை இறக்கிற்று. பிறகு, ஓடோடிச் சென்று, ஆவலோடு அவசர அவசரமாகச் சலசலத்து ஓடும் அந்த ஓடை நீரை நக்கிக் குடித்தது. கந்தனும் களைப் புத்தீர ஓடை நீரை அருந்தினான். மூச்சு வாங்க நாக்கைத் தொங்கவிட்டபடி வெற்றியோடு தன்னையே பார்த்து நிற்கும் மணியிடம் ஓடிப்போய், அப்படியே அதன் கழுத்தைக் கட்டி அணைத்துக்கொண்டான் கந்தன். அவன் கண்களிலிருந்து வழிந்த நீர், மணியின் முதுகை நனைத்தது. அவனால் பேச முடியவில்லை. தொண்டையை அடைத்தது. அது துக்கமல்ல, அன்பு. மணியும் அரைக்கண்ணை மூடிக்கொண்டு அவன் உடலோடு ஒட்டிக்கொண்டது. அப்படியே இருவரும் எத்தனை நேரம் இருந்தார்களோ தெரியாது. கந்தனுக்குப் பசி வயிற்றைக் கிண்டியதும்தான், தன் நினைவு வந்து எழுந்தான்.

"மணி, எனக்குப் பசிக்கிறதே, உனக்குந்தான் பசிக்கும் இந்தக் காட்டில் இப்படி இங்கேயே உட்கார்ந்திருந்தால் என்ன செய்வது?" என்று கேட்டான் கந்தன். அவன்

சொன்னதைப் புரிந்துகொண்டது போல மணி வெகுவேகமாக ஒரு பாதை வழியே நடக்க ஆரம்பித்தது. கந்தனும் அதைத் தொடர்ந்தான். சிறிது நேரத்தில் கந்தனின் பார்வையில் சில மாளிகைகளின் கோபுரம் தெரிய ஆரம்பித்தது. விதவிதமான சப்தங்கள் கேட்டன. ஏதோ ஒரு நகரத்தின் சமீபத்தில் வந்து கொண்டிருக்கிறோம் என்று அறிந்தான் கந்தன்.

நகரம் கண்ணில் தெரிந்ததும் கந்தன், கீழே குனிந்து, மணியை அன்போடு அணைத்துக்கொண்டு, "மணி, இனி நான் போய்க்கொள்ளுகிறேன். உன்னை இனி தொந்தரவு செய்ய வில்லை. இந்த நகரில் என்னைச் சங்கிலியோ ஊர் அதி காரியோ கண்டுபிடிக்க முடியாது; நீயும் வருகிறாயா?" என்றான்.

மணியும் கந்தனின் கன்னத்தை நக்கிவிட்டு வேகமாகக் காட்டில் சென்று மறைந்தது. கந்தன் ஊருக்குள் செல்ல நினைத்துப் பாலத்தை நோக்கி நடந்தான். மனத்தில் மகிழ்ச்சி பொங்கக் கந்தன் நகரத்துக்குள் போகப் பாலத்தைக் கடக்க முயலும்போது ஓர் உறுதியான கை அவன் தோளைப் பிடித்து நிறுத்தியது.

கனவிலிருந்து விடுபட்டவன் போலக் கந்தன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். வாட்டசாட்டமான ஒரு மனிதன். அடர்ந்த மீசை; காதுகளில் இரும்பு வளையங்கள்; உறுதியான உடல். அவனது உடையிலிருந்து அவன் ஓர் அரசாங்க அதிகாரி என்பது தெரிந்தது.

"தம்பி, எங்கே இத்தனை அவசரமாகப் போகிறாய்? முதலில் வரியைச் செலுத்திவிட்டு, அப்புறம் நீ குஷாலாகக் குதிபோட்டு நடந்து போ, தம்பி!" என்றான் அந்த மனிதன்.

"என்ன, வரியா!" என்று கந்தன் புருவங்களை நெறித்து நெற்றியைச் சுருக்கினான். கந்தனுக்கு இந்த விவகாரம் எதுவுமே தெரியாது.

"ஆமாம், தம்பி, இது சுங்க விடுதி. இந்தப் பாலம் இந்தத் தேசத்து அரசரால் கட்டப்பட்டது. இதைக் கடக்க ஒவ்வொரு

வரும் நாலணா வரி செலுத்தவேண்டும். உன்னிடம் சுமை இருந்தால் வரி இன்னும் அதிகமாகும். சரி, சரி, கூட்டம் சேருகிறது—எடு நாலணாவை'' என்றான் பாலத்துச் சுங்கச் சாவடிக்காரன்.

அரசர் என்றால் ஜனங்களுக்கு நன்மை செய்யும் பெரிய பணக்காரர் என்பதுதான் கந்தனது கற்பனை. ஜனங்களிட மிருந்து பல விதங்களில் வாங்கும் வரியினால்தான் அரசருக்குப் பணம் என்ற உண்மை அவனுக்குத் தெரியாது. கந்தன் தன் கந்தையை அவிழ்த்தான். பவுன் காசுகளுக்காகத்தான். ஆனால் அடுத்த நிமிஷம் அவன் முகம் ஏமாற்றத்தால் சுருங் கியது. படகில் தூங்கும்போது கந்தையில் முடிந்திருந்த பவுன் காசுகள் அவிழ்ந்து சிதறியதும், அவற்றைத் திருடர்கள் பொறுக்கிக்கொண்டுவிட்டதும் அப்பொழுதுதான் கந்தனின் நினைவுக்கு வந்தன.

''ம்... வந்து ...வந்து இன்று காலையில் நான் பெரிய பணக் காரனாக இருந்தேன். இப்போது நான்......என்னிடம் ஒரு காசுகூட இல்லை... என்னை உள்ளே விட்டாயானால் என் வரியை நான் நாளைக்கு அவசியம் செலுத்திவிடுகிறேன். என்னை நம்பு'' என்று கெஞ்சினான் கந்தன்.

சுங்க அதிகாரி கண்களை உருட்டி விழித்தான். மீசை துடித்தது. ''போடா பொடிப்பயலே. பேச்சைப் பாரு பேச்சை. காலையில் பணக்காரனாக இருந்தானாம்; பகலுக்குள் பண்டாரமாகிவிட்டானாம்! அடேய், நீ ஒரு முழு ரூபாயைப் பார்த்திருப்பாயா? ஏமாற்றவா பார்க்கிறாய்? காசில்லாமல் உள்ளே நுழைய முடியாது, போ!'' என்று கந்தனின் கழுத்தை நெட்டித் தள்ளினான்.

பாவம் கந்தன், எவ்வளவு மகிழ்ச்சியோடு வந்தானோ அத்தனைக்கத்தனை துக்கத்தோடு தொங்கிய தலையுடன் வந்த வழியே திரும்பி வந்து, மணியை வழி அனுப்பிய அந்தப் புல் தரையில் வந்து படுத்தான். மனத்தில் மகிழ்ச்சி இருந்தவரை பசிகூடத் தெரியவில்லை. ஆனால், இப்போது தாங்க முடியாத அளவு பசி. அவனுக்கு ஒன்றுமே யோசனை ஓடவில்லை.

ஒவ்வொரு தடவையும் மணி வந்து உதவி செய்திருக்கிறது. அப்படி அது உதவி செய்வதுகூட இப்போது வெட்கமாகப் பட்டது. யோசனை செய்தபடியே நீண்டு வளர்ந்திருந்த பசும் புல்லைப் பறித்துக் கடித்தபடி கண்ணை மூடிக்கொண்டு படுத்திருந்தான்.

கந்தனின் உருவம் மறையும்வரை ஓடிய மணி, உடனே கந்தனுக்குத் தெரியாமல் திரும்பி வந்து, அவன் நடத்தையைக் கவனித்துக்கொண்டிருந்தது. கந்தனின் கஷ்ட காலத்தைப் பார்த்தது. நகருக்குள் போகாமல் திரும்பி வந்து புல் தரையில் துவண்டு படுத்து இருப்பதைக் கண்டது. உடனே அவன் நிலையைப் புரிந்துகொண்டது போலக் காட்டிற்குள் ஓடியது. வெகுவேகமாகப் பாய்ந்து பாய்ந்து தாவி ஓடியது. நேரே தனது இரகசிய குகைக்குச் சென்றது. அதற்கு என்ன செய்ய வேண்டும் என்பது தெரியும்; கந்தனுக்குத் தேவை என்ன என்பதும் தெரியும். அங்கே கொட்டிக் குவிந்து இறைந்து கிடந்த பொன், மணி, மாணிக்கம்-இவைகளின்மீது நடந்து சென்றது. அதன் கண்கள் எதையோ தேடின. ஆ! அதோ கிடைத்துவிட்டது. அது ஓர் அழகிய மோதிரம். இரண்டு மாணிக்கங்களின் நடுவில் ஒரு நல்முத்துப் பதித்த மோதிரம். அதை அப்படியே லாகவமாக வாயில் கௌவிக்கொண்டது.

அதன் உடலிலிருந்து வியர்வை, மழை போல வழிந்து கொட்டிக்கொண்டிருந்தது. எவ்வளவு தூரம் ஓடிவந்திருக்கிறது! ஒரு தடவை உடலைப் படபடவென்று குலுக்கிவிட்டு ஓட ஆரம்பித்தது. எங்கே என்று சொல்லவா வேண்டும்? செய்வதறியாது கண்மூடிப் படுத்துக்கிடந்த கந்தனிடந்தான் அது வந்து நின்றது; அருகில் சென்றது. முதுகோடு ஒட்டி இருந்த அவன் பஞ்சு வயிற்றில் தன் முகத்தை வைத்துப் படுத்துக் கொண்டது.

ஜில்லென்று ஸ்பரிசத்தை உணர்ந்த கந்தனுக்கு உடனே மணியின் நினைவுதான் வந்தது. உடனே, ''சீச்சீ, என்ன கேவலம்'' என்று தன்னையே நொந்துகொண்டான். ஆனால், அந்த பொல்லாத மனம் அந்த நினைவை அழிக்க மறுத்தது.

"மணி, இப்போது ஒரு பவுனை உன் வயிற்றில் கொண்டுவந்து போட்டிருக்கிறது" என்று சொல்லியது மனம். இத்தனையும் ஒரு நிமிஷத்தில் தோன்றி மறைந்தன. கந்தன் கண்களைத் திறக்கவே இல்லை. அவனுக்கு மணி வருவதும் உதவி செய்வதும் கௌரவக் குறைவாக, வெட்கமாக இருந்தது. கண்களை மூடியபடியே மெதுவாகக் கைகளால் தடவினான். அவன் கையில் பட்டது மணியின் ஜிலு ஜிலுப்பான மூக்குதான். அவனை அறியாமல் அவன் உடல் துள்ளி எழுந்து உட்கார்ந்தது.

"மணி, மறுபடி நீயேதானா?" என்று கேட்டுக்கொண்டிருக்கும்போதே, அதன் வாயிலிருந்த மோதிரம் புல் தரையில் விழுந்து 'டால்' வீச ஆரம்பித்தது. "மணி, மணி, இது என்ன? ஐயோ...!" திகைப்பையும் வியப்பையும் அவன் கண்கள் கக்கின. அதை எடுக்கவே அவன் கைகள் நடுங்கின. அவனையே பார்த்துக்கொண்டிருந்தது மணி. நெருப்புத் துண்டுபோல ஜுவலித்துக்கொண்டிருந்த மாணிக்கம் பதித்த மோதிரத்தைக் கந்தன் எடுத்துத் திருப்பிப் பார்த்தான்.

"மணி, முடியாது, இதை எடுத்துக்கொள்ள முடியாது. இதெல்லாம் உனக்கு எங்கிருந்து கிடைக்கிறது? எப்படிக் கொண்டுவருகிறாய்?" என்று படபடப்புடன் கேட்டான் கந்தன். ஆனால், அவன் கேள்விக்குப் பதில் சொல்ல அங்கு மணி இல்லை. அவன் மோதிரத்தைக் கையில் எடுத்த உடனேயே அது ஓடிவிட்டது.

கந்தன் வெகுநேரம் வரையில் மோதிரத்துடன் உட்கார்ந்திருந்தான். அதை எடுத்துக்கொள்ளுவதா வேண்டாவா என்று அவன் மனம் போராடிக்கொண்டிருந்தது. கடைசியில் பசிதான் வென்றது.

'சரி, இதுதான் கடைசி முறை. இதை மட்டும் எடுத்துக் கொள்ளலாம். நகரத்திற்குச் சென்று முதலில் நல்ல உடைகள் வாங்கிக்கொள்ளவேண்டும். அப்போதுதான் என்னையும் என் வார்த்தையையும் மதிப்பார்கள்," என்று தீர்மானத்துக்கு வந்த கந்தன், மோதிரத்துடன் மறுபடி அரசாங்கச் சுங்க அதிகாரி முன் போய் நின்றான்.

கந்தன் பேசாமல் கையை உயர்த்தி, மோதிரத்தை அவன் முகத்துக்கு முன்னால் நீட்டி, "ம். இந்த மோதிரத்தை வைத்துக்கொண்டு உன் வரிக்காக நாலணாப் போக பாக்கியைக் கொடு, இதன் மதிப்புத் தெரியுமல்லவா?" என்றான் அலட்சியமாக. மோதிரத்தில் சூரிய வெளிச்சம் பட்டு, மின்னிக் கொண்டிருந்தது. சுங்க அதிகாரி சிலையாகிவிட்டான். கண்கள் பிதுங்கி வெளியே விழுந்துவிடுவது போல உருட்டி விழித்துக் கொண்டிருந்த அவன், அப்படியே ஸ்தம்பித்துவிட்டான். அந்த மோதிரத்தின் அழகில் அவன் மயங்கி இருந்ததால் பாலத்தின் கதவு மூடி இருந்தது. இரு பக்கங்களிலும் கூட்டம் சேர்ந்து விட்டது.

இந்த நிலையில் 'கடகட'வென்று ஓர் அழகிய கோச்சு வண்டி அங்கு வந்து நின்றது. எட்டு வெள்ளைக் குதிரைகள் பூட்டிய அழகான கோச்சு; பாலத்தில் கதவு மூடி இருப்பதையும், இரு பக்கங்களிலும் ஜனங்களும் வண்டிகளும் கூடிவிட்டதை யும் கண்ட கோச்சு வண்டி ஓட்டிக்குக் கோபம் வந்தது.

"யாரப்பா அங்கே? ஏய், சுங்க அதிகாரி! அரசரின் கோச் சுக்குத் தடையாக இதென்ன கூட்டம். என்ன செய்கிறாய் அங்கே?" என்று உரக்கச் சப்தமிட்டான். மோதிரத்தின் அழகில் மயங்கி நின்ற அதிகாரி, அரசரின் கோச்சு என்ற வார்த்தையைக் கேட்டதும் துள்ளிக் குதித்துத் திரும்பிப் பார்த் தான். அரசாங்கக் கொடி 'ஜிலுஜிலு' என்று பறந்துகொண் டிருந்தது; எட்டுக் குதிரைகளும் கனைத்து முன்னங்கால்களால் தரையைக் கிளறியபடி கம்பீரமாக நின்றன. சுங்க அதிகாரி ஓடோடி வந்து, அரசரின் முன் மண்டியிட்டு வணங்கி, "அரசே, மன்னிக்கவேண்டும்" என்று மோதிரத்தைக் காட்டி, நடந்தது அனைத்தையும் சொன்னான். மோதிரத்தை கையில் வாங்கிப் பார்த்தார் அரசர், "என்ன, இந்தப் பையனா இதைக் கொடுத் தான்? இவனுக்கு இது எப்படி கிடைத்திருக்கும்? இவன் இதை எங்கேயோ திருடி இருக்கிறான். யாரது, இந்தப் பையனைப் பிடித்துக் கோச்சின் பின்னால் கட்டுங்கள். அரண்மனைக்குப் போய் அவனை விசாரித்துக்கொள்ளுகிறேன்" என்று உத்தர விட்டார் அரசர்.

கந்தன் "அரசே! அரசே!" என்று ஏதோ சொல்லத் துடித்துக்கொண்டு கோச்சின் அருகே ஓடினான். ஆனால் வீரர்கள் அவனை விடவில்லை. கோச்சு வண்டியின் பின்னால் பிணைத்துக் கட்டினார்கள்.




கந்தன் இப்போது துந்துபி நாட்டின் தலைநகரான சுந்தர புரிக்குள் போய்க்கொண்டிருந்தான்; நடந்தல்ல; அரசரின் கோச்சிலே சவாரியா செய்தான்? அதுவுமல்ல; கோச்சின் பின்னால் அவனைக் கட்டிப்போட்டிருந்தார்கள். தன் விதியை நொந்து கொண்டே வருந்தினான் கந்தன். பல வீதிகளைக் கடந்து சென்றது அரசரின் கோச்சு. முடிவாக அரண்மனை வாசலில் போய் நின்றது. அரசர் சுமந்திரர் இறங்கினார். இரண்டு சேவகர்கள் கந்தனின் கட்டுகளை அவிழ்த்து, அவனை அவர் பின்னாலேயே கொண்டுபோனார்கள். அன்று முழுவதும் சாப்பிடாத கந்தனுக்குப் பசி குடலைச் சுருட்டி இழுத்தது; மனத்திலே வேதனையும் பயமும் வேறு. கந்தனால் அரண்மனையின் உயர்ந்த படிகளில் ஏற முடியவில்லை. கண் இருண்டது; தலை சுற்றியது. அப்படியே மயங்கிச் சுருண்டு விழுந்துவிட்டான்.

மறுபடி கந்தன் கண் விழித்த போது, தான் பட்டு மெத்தைக் கட்டிலில் படுத்திருப்பதை உணர்ந்தான். அரசர் அவன் தலைப்பக்கத்தினருகில் ஓர் உயர்ந்த பீடத்தில் உட்கார்ந்திருந்தார். கந்தனையே பார்த்துக்கொண்டிருந்த அரசர், அவன் கண் விழித்ததும் மகிழ்ச்சியடைந்தார். ''தம்பி, இப்போது எப்படி இருக்கிறது உடம்பு?'' என்று கேட்டார்.

தன்னால்—தன் உத்தரவினால்தான் கந்தன் மயங்கி விழுந்து விட்டான் என்று அரசர் ரொம்ப வேதனையடைந்தார்.

அரசரைக் கண்டதும் கந்தன் பரபரப்புடன், "வந்து, வந்து அந்த மோதிரத்தை நான் திருடவில்லை, அரசே...அது எனக்கு மணி கொண்டுவந்து கொடுத்தது...என்னை நம்புங்கள்...என்னை ஜெயிலில் போடாதீர்கள்..." என்று அழுது கொண்டே சொன்னான். பசியின் களைப்பினால் அவனால் பேசமுடியவில்லை.

அரசர் சுமந்திரர் மிகவும் நல்லவர்; தயாள குணம் படைத்தவர்; குழந்தைகள் என்றால் அவருக்குப் பிடிக்கும். குழந்தை உள்ளந்தான் அவருக்கு. சுமந்திரருக்கு வயதாகிவிட்டது. அவர் மிகவும் நல்லவராக இருந்ததால் மந்திரி, சேனாதிபதி முதலியவர்கள் தன்னிச்சையாக நாட்டை ஆண்டுவந்தனர். சுமந்திரரின் பொக்கிஷத்திலே பொருள் இல்லை. அரண்மனைச் சேவகர்களுக்கே மூன்று மாதச் சம்பளம் பாக்கி என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன். அரசாங்கப் பணத்தை எல்லாம் மந்திரி ருத்திரசிம்மர் கபளீகரம் செய்துவந்தார். ருத்திரசிம்மரிடம் நம்பிக்கைகொண்டிருந்த அரசர் அவரைச் சந்தேகிக்கவில்லை.

கந்தன் தன் கதை முழுவதையும் சொன்னான்; உருக்கமாகச் சொன்னான்; அழுதுகொண்டே சொன்னான். அரசரும் கண்களில் நீர் வழியக் கேட்டார். தன் நாட்டில் இத்தகைய கொடியவர்கள் இருக்கிறார்களா என்று தவித்துப்போனார். கந்தனின் நிலையை எண்ணியபோது துக்கம் அவர் தொண்டையை அடைத்துக்கொண்டது.

அரசர் சுமந்திரர் கையைத் தட்டினார். இரண்டு சேவகர்கள் வணங்கி நின்றார்கள். கந்தனுக்கு அறுசுவை உண்டி கொண்டுவரும்படி உத்தரவிட்டார். கந்தனின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. [illegible]சி பறந்தது; களைப்பு நீங்கியது. உடனே கட்டிலிருந்து [illegible]கான். அரசர் முன்னே மண்டியிட்டு வணங்கி அவ[illegible]ளத் தொட்டு முத்தமிட்டான்.

''உன் மோதிரத்துக்கு நான் விலை கொடுத்துவிடுகிறேன். அது விலை மதிக்க முடியாதது. ஆனால், என்னிடம் ஐநூறு பவுன்தான் இருக்கிறது. அதை வாங்கிக்கொள். இந்த மோதிரத்தைப் பிரிய எனக்கு மனமில்லை'' என்றார் அரசர்.

''வேண்டாம்......வேண்டாம். எனக்குப் பொன்னும் வேண்டாம்; பொருளும் வேண்டாம்; அந்த மோதிரத்தை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள்'' என்றான் கந்தன்.

ஆனால், அரசர் அதற்குச் சம்மதிக்கவில்லை. பிறருக்குக் கொடுக்கவேண்டிய அவர் பிறரிடமிருந்து வாங்கிக்கொள்ளு வாரா? அதுவும் ஓர் ஏழைப் பையனிடமிருந்து வாங்கிக் கொண்டால் அவர் கௌரவம், மதிப்பு என்ன ஆகும்? ஆகவே, தம் பொன்னைப் பெற்றுக்கொண்டால்தான் மோதிரத்தை ஏற்றுக்கொள்ள முடியும் என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார் சுமந்திரர்.

கந்தனுக்குத் தான் காண்பது கனவா என்ற ஐயம் பிறந்தது. சற்று நேரத்துக்கு முன்பு அரசரின் கைதியாக இருந்தவன் இப்போது அரசரின் அன்புக்குப் பாத்திரனாகி விட்டான். கண்களில் நீர் தளும்ப அரசர் நீட்டிய பொன் முடிப்பை வாங்கிக்கொண்டான் கந்தன். அரசரும் கந்தனின் மோதிரத்தைக் களிப்புடன் விரலில் அணிந்துகொண்டார். பிறகு, மந்திரி ருத்திரசிம்மருக்கு ஓர் உத்தரவு எழுதினார்.

''இன்று முதல் கந்தன் என்கிற இந்தப் பையன் நம் அரண்மனைப் பணியாளருள் ஒருவன். என் அந்தரங்க வேலைக் காரனாக வைத்துக்கொள்ளப் போகிறேன். மாதம் 50 ரூபாய் சம்பளம் போட்டு, நமது அரண்மனைக் கணக்கில் இவன் பெயரையும் சேர்த்துக்கொள்ளுங்கள்'' என்று எழுதிக் கையொப்பமிட்டு அதைக் கந்தனிடம் கொடுத்து, ''கந்தா! இன்று முதல் நான் சொல்லும் வேலைகளைச் செய்ய நீ என் கூடவே இருக்கவேண்டும். இந்த உத்தரவை மந்திரி ருத்திர சிம்மரிடம் காட்டு. உனக்கு வேண்டியதைச் செய்வார்'' என்று சொல்லி அனுப்பினார். கந்தனின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. குதித்துக்கொண்டு ஓடினான்; ருத்திரசிம்மரிடம், அரசரின் உத்தரவை நீட்டினான்.

ருத்திரசிம்மரைப் பார்க்கவே பயமாக இருந்தது. முறுக்கி விட்ட மீசை, கழுகுக் கண்கள், குரூரமான முகத்தோற்றம். அரசரின் உத்தரவைப் படித்த அவர் கந்தனை உற்றுப் பார்த்தார். "ம்... உள்ளவர்களுக்கே மூன்று மாதச் சம்பளம் பாக்கி, இந்த லட்சணத்தில் புதிதாக வேறு ஆள் சேர்க்கிறார்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டார். பிறகு, தம் கழுகுக் கண்களைச் சுருக்கி நெற்றிமேல் ஏற்றிக்கொண்டு, "யாரப்பா நீ, காட்டான் மாதிரி இருக்கிறாய்?" என்றார். அவர் குரல் கம்பீரமாக, ஆனால் கண்டிப்பாக இருந்தது.

கந்தன் மென்று விழுங்கினான். "வந்துநான்" என்று குழறினான். அவர்முன் பேசவே அவனுக்குப் பயமாக இருந்தது.

"வந்துமில்லை போயுமில்லை. உனக்கு ஏற்ற உடைகள் வாங்க 5 பவுன் ஆகும், வைத்திருக்கிறாயா?" என்றார் ருத்திரசிம்மர்.

"ஓ, இதோ" என்று அரசர் கொடுத்த பவுன் பையை அவிழ்த்து, அதிலிருந்து 6 பவுன்களை எடுத்து எண்ணி, மந்திரியின் முன்னுள்ள மேஜைமீது வைத்துவிட்டுப் பையைக் கட்டினான் கந்தன். அதிலிருந்த பவுன் காசுகள் 'கலகல' வென்று குலுங்கி ஒலித்தன.

பார்த்தார் மந்திரி. அவர் கண்ணில் ஆசைத்தீ ஜுவாலைவிட்டது. வியப்புடன் அவன் கையிலுள்ள பொன் முடிப்பையே கண் இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு, ஒரு முடிவுக்கு வந்தவராகத் தம் அருகிலிருந்த தாம்பாளம் போன்ற ஒரு தட்டில் மரச்சுத்தியால் ஒரு தட்டுத் தட்டினார். அந்த அறையெங்கும் அதன் ஒலி பரவியது. இரண்டு வீரர்கள் வந்து வணங்கி நின்றார்கள்.

"அரசரின் அந்தரங்க வேலைக்காரனுக்கான அறையை இந்தப் பையனுக்கு ஒழித்துக்கொடு" என்று உத்தரவிட்டார் ருத்திரசிம்மர். கந்தனை அவர்கள் அழைத்துச் சென்றார்கள். வெகுநேரம்வரை ருத்திரசிம்மர் சிலைபோல உட்கார்ந்திருந்தார். கந்தன் கையிலிருந்த பொன் மூட்டை அவர் கண்களை விட்டு அகலவே இல்லை.

வெல்வெட் சட்டை, பட்டுப் பைஜாமா எல்லாம் வந்து சேர்ந்தன கந்தனுக்கு. கந்தையைச் சுருட்டி வைத்தான். பள பளக்கும் புது உடைகளை அணிந்துகொண்டான். அரசாங்க உத்தியோகம்; அரண்மனைச் சாப்பாடு; தனியான அறை. கந்தனுக்குப் பெருமை பிடிபடவில்லை. அதே சமயம் ஊர் அதிகாரி வீட்டில் நடந்த சம்பவங்கள் நினைவுக்கு வந்து உடலைக் குலுக்கியது.

மாலை மறைந்து இரவு வந்தது. கந்தன் அரண்மனை அறையில் தனக்கு வந்த யோகத்தை எண்ணியபடி படுத்துக் கொண்டிருந்தான். தன்னுடைய இந்த நிலைக்கு மணிதான் காரணமென்பதை அவன் மறந்துவிடவில்லை. ஆனால், மணியின் மர்மம் அவனுக்குப் புரியாத புதிராக இருந்தது. 'இத்தனை விலை மதிப்பற்ற பொருள்களெல்லாம் அதற்கு எப்படிக் கிடைக்கின்றன? காட்டிற்குள்ளே ஓடும் மணி எங்கே போகிறது?' என்ற விவரமெல்லாம் கந்தனுக்கு விளங்கவில்லை. மணியின் அன்பையும் அறிவையும் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்த அவன் அப்படியே தூங்கிப்போய்விட்டான்.

நள்ளிரவு நேரம். கந்தனின் அறை ஜன்னலருகே ஒரு நிழல் படிந்தது; அது ஓர் ஏணியின் நிழல். கந்தனின் அறை அரசரின் அறைக்குப் பக்கத்தில் இருந்தது. ஏணியைக் கந்தனின் அறை ஜன்னலின்மீது சாத்தி வைத்து ஓர் உருவம் ஓசைப்படாமல் அதன் வழியாக ஏறியது. ஜன்னல் வழியாக உள்ளே குதித்தது. கந்தன் கண் விழித்துப் பார்த்திருப்பா னானால் அந்த உருவம் மந்திரி ருத்திரசிம்மர் என்பதை அறிந்து வியப்படைந்திருப்பான். ஆனால் கந்தனோ நல்ல அயர்ந்த தூக்கத்திலிருந்தான். பூனைபோல நடந்துவந்த ருத்திரசிம்மர் கந்தன் படுத்திருந்த கட்டிலின் அருகே சென்றார். அவன் தலைமாட்டில் வைத்திருந்த பொன் முடிப்பை லாகவமாக எடுத்துக்கொண்டு அந்த இடத்தில் தாம் தயாராகக் கொண்டுவந்திருந்த வேறொரு முடிப்பை வைத்துவிட்டு, வந்தது போலவே திரும்பிவிட்டார். கந்தனுக்கு நடந்தது ஒன்றுமே தெரியாது.

பொழுது புலர்ந்தது; புள்ளினங்கள் பாடின. கந்தன் கண் விழித்துப் பார்த்தான். இரண்டு சிவப்புக் குருவிகள் ஜன்னலை அடுத்திருந்த மரக்கிளையில் உட்கார்ந்து காலைக் கதிரவனின் பொன்னொளியில் குளிர் காய்ந்தபடி கிசுகிசுத்துக்கொண்டிருந்தன. கந்தனின் உள்ளம் உவகையால் நிறைந்திருந்தது. தலைமாட்டில் வைத்திருந்த பொன் முடிப்பைத் தொட்டுப் பார்த்தான். வைத்தது வைத்தபடி இருக்கவே நிம்மதியுடன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு அரசரின் சமூகத்துக்குச் செல்லத் தயாரானான். இதற்குள் சுடச்சுட உணவு கொண்டு வந்தான், ஒரு வேலைக்காரன். அரசரின் அந்தரங்கப் பணியாளனல்லவா கந்தன். ஆகவே, அவனுக்கு உபசாரம் பலமாக இருந்தது. கந்தன் பலகாரம் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது அடுத்த அறையில் ருத்திரசிம்மர் அரசரிடம் பேசிக்கொண்டிருப்பது அவனுக்குக் கேட்டது.

"அரசே, தீபாவளிப் பண்டிகைக்கு இன்னும் இரண்டு நாள்கள்தாம் இருக்கின்றன. அரண்மனைப் பணியாள்களுக்கு மூன்று மாதச் சம்பளம் பாக்கி. இந்தச் சமயத்தில் கொடுக்காவிட்டால் புரட்சி செய்வார்கள். வேலை நிறுத்தம் செய்தால் பிறகு நம் கதி என்னாவது?"

"என்ன செய்யச் சொல்கிறீர்? நீர்தான் ஒரு வழி சொல்ல வேண்டும். என்னிடமோ பணமில்லை, என்ன செய்வேன்" என்றார் அரசர் சுமந்திரர், வருத்தத்துடன்.

"தீபாவளிப் பண்டிகை கொண்டாட அவர்களுக்குப் பணம் கொடுத்தால்தான் புரட்சியைத் தவிர்க்கலாம். நான் நிலைமையைச் சொல்லிவிட்டேன். பிறகு உங்கள் பாடு" என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார் வஞ்சக மந்திரி.

இந்தச் சம்பாஷணையைக் கேட்ட கந்தனுக்கு அரசரின் நிலை புரிய வெகுநேரமாகவில்லை. அரண்மனையில் புரட்சி என்றால் கேவலமல்லவா? பிறகு மக்கள் அரசரை மதிக்க மாட்டார்கள். பகை அரசன் போருக்கு வரத் தயாராகி விடுவான். தன்னிடம் பரிவு காட்டிய அரசரை இந்த இக்

கட்டான நிலையிலிருந்து காப்பாற்றவேண்டும் என்று முடிவு கட்டினான் கந்தன். சட்டென்று ஒரு யோசனை தோன்றியது அவனுக்கு.

அடுத்த விநாடி விசனத்துடன் உட்கார்ந்திருக்கும் அரசர் முன் போய் மண்டியிட்டு வணங்கி எழுந்து நின்றான் கந்தன். "அரசே, தங்கள் கவலையை என்னால் போக்கிவிடமுடியும். இதோ, இந்த முடிப்பில் நானூற்றுத் தொண்ணூற்றைந்து பவுன் இருக்கிறது. அரண்மனை ஊழியர்களுக்கு ஒரு மாதச் சம்பளத்தையாவது கொடுத்து நிலைமையைச் சமாளியுங்கள்" என்று சொல்லி, பொன் முடிப்பை நீட்டினான்.

அரசர் மகிழ்ச்சி அடைந்தார். ஆனால், உடனே, "கந்தா! நான் கொடுத்ததை நானே திரும்பப் பெறுவதா? வேண்டாம்" என்றார். ஆனால், கந்தன் விடவில்லை. "இதை உங்களுக்காக வாங்கிக்கொள்ளவில்லையே. ஊழியர்களின் உற்சாகத்துக்காகத்தானே. வரிவசூல் வந்த பிறகு இந்த நிலைமை மாறி விடாதா?" என்று சமாதானம் சொல்லி இணங்க வைத்து விட்டான்.

உடனே அரசரிடமிருந்து உத்தரவு பறந்தது. தர்பார் மண்டபத்திலே அரண்மனை ஊழியர்கள் வரிசையாக வந்து தங்கள் சம்பளத்தைப் பெற்றுப் போகலாம் என்று அறிவிக்கப் பட்டது. இந்தச் செய்தி எல்லோரையும் திகைப்பிலாழ்த்தியது. முக்கியமாக மந்திரி ருத்திரசிம்மருக்கு இது அதிர்ச்சியையே கொடுத்தது. கஜானாவில் காலணா கிடையாது என்பது அவருக்குத் தெரியும். அரசர், ஊழியர்களுக்குச் சம்பளம் எப்படிக் கொடுக்கப் போகிறார் என்று பார்க்க அவசர அவசரமாக ருத்திரசிம்மர் தம் கூட்டாளி சேனாதிபதி சிங்கமுகனுடன் தர்பார் மண்டபத்துக்கு விரைந்தார்.

இதற்குள் அங்கு கூட்டம் கூடிவிட்டது. பணியாள்கள் வரிசையாக நின்றுகொண்டிருந்தார்கள். அரசர் உயர்ந்த ஆசனத்தில், முகத்தில் மகிழ்ச்சி பொங்க உட்கார்ந்திருந்தார். அவர் முன்னால் ஓர் இடத்தில் பொன் முடிப்பு வைக்கப்பட்

டிருந்தது. அரசரின் அருகே கந்தன் பெருமை பொங்கும் முகத்துடன் நின்றுகொண்டிருந்தான்.

"அன்புடைய என் அரண்மனைப் பணியாளர்களே, உங்கள் மகிழ்ச்சியே என் மகிழ்ச்சி. வரும் தீபாவளியை நீங்கள் உற்சாகமாகக் கொண்டாட உங்கள் ஒவ்வொருவருக்கும் இரண்டு பவுன் பரிசாக அளிக்கத் தீர்மானித்திருக்கிறேன். வரி வசூல் ஆனதும் சம்பளப்பணமும் தரப்படும்" என்றார் அரசர். பணியாளர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். மந்திரிக்கு நிலைமை புரிந்துவிட்டது. பீடத்தின் மீதுள்ள பொன் முடிப்பு அவருக்கு நடந்தது அவ்வளவையும் சொல்லி விட்டது. நடக்கப்போவதை எண்ணி மனத்துக்குள் சிரித்துக் கொண்டார்.

மறுபடி அரசர் பேசினார்: "ஒவ்வொருவராக வந்து இதோ என் முன்னாலுள்ள பொற்கிழியில் நீங்களாகவே கை விட்டு இரண்டிரண்டு பவுன் எடுத்துக்கொள்ளுங்கள்" என்றார்.

அரண்மனைப் பிரதம காவலாளி முதலில் வந்தான். பைக்குள் கையை விட்டுப் பவுனை எடுத்துக்கொண்டு திரும்பினான். திரும்பியவன் தன் உள்ளங்கையில் மின்னும் பவுனை எதிர் பார்த்து நோக்கினான். அடுத்த விநாடி அவன் முகம் கறுத்தது. கோபமுடன் அரசர் பக்கம் திரும்பினான். அவன் உதடுகள் துடித்தன. அலட்சியமாகக் கையிலிருந்ததை அவர் முன் வீசி எறிந்தான். இரண்டு பளபளக்கும் பித்தளைப் பொத்தான்கள் உருண்டு ஓடின. "அரசே, இது என்ன விளையாட்டு? எங்களை இப்படி ஏமாற்றுவது அழகல்ல" என்றான் அவன். அரசர் திடுக்கிட்டுவிட்டார். கந்தனும் துள்ளிக் குதித்தான். பாவம், முதல் நாள் இரவு பை, கை மாறிப்போன விஷயம் அவனுக்குத் தெரிந்திருந்தால் இது நடந்திருக்காது. அரசர் பைக்குள் கையை விட்டார். அத்தனையும் இராணுவ வீரர்களின் உடைக்கு அலங்காரமாக வைத்துத் தைக்கும் பித்தளைப் பொத்தான்கள். அரசர் சுமந்திரர் நல்லவர்தாம். ஆனால் இப்போது அவர் கண்களில் நெருப்புப் பொறி பறந்தது.

"அடேய் பயலே, உன்னை நம்பிய என்னை நீ ஏமாற்றி அவமானப்படுத்திவிட்டாயல்லவா?" என்று கர்ஜித்தார்.

"அரசே! இதில் ஏதோ சூது நடந்திருக்கிறது" என்று குமுறினான் கந்தன். அவன் கண்களில் நீர் முட்டி நின்றது.

"சூதோ, வாதோ எனக்குத் தெரியாது. மந்திரி, இந்த அயோக்கியனைக் கொண்டுபோய்ச் சிறையில் தள்ளுங்கள்," என்று சொல்லிவிட்டு எழுந்துவிட்டார். சற்று முன்பு ஆனந்தம் குடி கொண்டிருந்த அரண்மனை அழுது வடிந்தது. வஞ்சகக்கார மந்திரி நெஞ்சுக்குள் சிரித்துக்கொண்டார்.



## விருந்தும் வைரமாலையும்

கந்தனுக்கு அழுகை வந்தது. இப்போது அவன் சிறைச்சாலையில், கல் தரையில் உட்கார்ந்திருந்தான். நேற்று இந்த நேரத்துக்கு அவன் அரசரின் அந்தரங்கப் பணியாளன். பகட்டான ஆடை, அறுசுவை உண்டி. இன்றோ அரசியல் கைதி, கட்டாந்தரை, குடிக்கக் கூழ். தனது விந்தையான வாழ்க்கையை எண்ணியபோது ஒரு பக்கம் அவனுக்குச் சிரிப்புத்தான் வந்தது.

'நான் வேண்டுமென்று செய்யவில்லை. பவுன் மறைந்த மாயம் எனக்கும் விளங்கவில்லை' என்று கெஞ்சினான் அரசரிடம் கந்தன். ஆனால், அவமானமடைந்த அரசர், கந்தனிடம் இரக்கம் காட்டவில்லை. அதன் பலன் இப்போது சிறைச்சாலையில். கந்தன் உயரத்திலிருந்த ஒரே ஜன்னலை எவ்விப் பிடித்துத் தாவியபடி வெளியே பார்த்தான். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை காடு. காட்டைப் பார்த்ததும் கந்தனுக்கு மணியின் நினைவுதான் வந்தது. உடனே உரக்க அதை அழைத்தான். உருக்கமாக, உதவிக்கு ஓடிவா என்று கூப்பிட்டான். வெகு நேரம்வரை எவ்விதப் பலனும் ஏற்படவில்லை. கந்தன் நம்பிக்கை இழக்கும் தறுவாயில் குபீரென்று ஜன்னல் கம்பிகளில் முன்னங்கால்களை வைத்துத் தாவி வந்து கம்பீரமாக நின்றது மணி. கந்தனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. கம்பியின் வழியே கந்தனின் கைகளை மணி நக்கியது. "என்ன கஷ்டம் உனக்கு? என்னை ஏன் அழைத்தாய்?" என்று கேட்பது போலிருந்தது அதன் பார்வை.

கந்தன் தன் நிலையை விளக்கினான். அரசருக்குத் தன்மீது ஏற்பட்டுள்ள கோபத்தின் காரணத்தைப்பற்றிச் சொன்னான். அவருக்குள்ள பொருளாதார நெருக்கடியைப்பற்றியும் விளக்கினான் தன் நண்பனிடம். அடுத்த விநாடி தன் தோழன் சொன்னதை எல்லாம் மணி புரிந்துகொண்டது போல, தலையை ஆட்டிவிட்டுக் காட்டில் நுழைந்து ஓடி மறைந்தது. கந்தனும் நிம்மதியுடன் அதன் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

சிறைச்சாலைக்கு வெளியே கந்தனிருந்த அறையின் ஜன்னலருகே இரண்டு உருவங்கள் பதுங்கி இருந்தபடி மணியோடு கந்தன் உரையாடுவதைக் கவனித்துக்கொண்டிருந்தன. அது வேறு யாருமல்ல; வஞ்சக நெஞ்சம் கொண்ட மந்திரியும் அவன் சகபாடி சேனாபதியுந்தாம். தன் நண்பன் அதிசய நாயைப் பற்றி அரசரிடம் கந்தன் சொன்னதை எல்லாம் மந்திரி கேட்டுக் கொண்டிருந்தார். கந்தன் ஆபத்திலிருக்கும் போதெல்லாம் அந்த நாய் வந்து வியக்கத்தக்க முறையில் உதவி செய்கிறது என்பதைத் தெரிந்துகொண்ட அவரது பேராசைத்தீ கொழுந்துவிட்டு எரியத் தொடங்கியது. அந்த நாயைப் பிடித்து, அது விலையுயர்ந்த பொருள்களை எல்லாம் எங்கிருந்து கொண்டுவருகிறது என்பதை அறிந்து, அதை எல்லாம் ஒரேயடியாக அபகரித்துக்கொண்டுவிட வேண்டும் என்று திட்டம் வகுத்தார்கள் ருத்திரசிம்மரும் சிங்கமுகனும்.

அவர்கள் திட்டம் இதுதான். கந்தன் சிறையிலிருப்பதை நாய் பார்த்துக்கொண்டு போயிருக்கிறது. அவனை மீட்க அது ஏதாவது கொண்டுவரும். அதைக் கொடுத்துவிட்டு அது திரும்பும்போது இருவரும் அதைப் பின்தொடருவது என்று முடிவு செய்தனர். நாய் அறியும்படி பின்தொடர முடியாது. ஆகவே, ருத்திரசிம்மர் அதற்கும் ஒரு யுக்திசெய்திருந்தார். நீல வர்ணத்தூள் தூவி வைத்தார். முதல் நாள் இரவு மழை பெய்திருந்ததால் பூமியெல்லாம் ஈரமாக இருந்தது. நாய் நீல வர்ணத்தில் கால் வைத்துத்தான் ஜன்னலின்மீது தாவி ஏறவேண்டும். அப்போது அந்தப் பொடி அதன் கால்களில் நன்றாக ஒட்டிக் கொள்ளும். பிறகு அது திரும்பிச் செல்லும்போது அதன் பாதம் பட்ட இடமெல்லாம் நீல வர்ண அடையாளங்கள் தெரியும்.

வெகுநேரம்வரை மங்காத மறையாத நீலவர்ணப்பொடி அது. நாயின் நீலவர்ணப் பாத அடையாளத்தைக்கொண்டு அது போகுமிடத்தை அறிந்து, அதைக் கொன்றுவிட்டு, அது பாது காக்கும் புதையலை அபகரித்துக்கொள்ளலாம் என்பதே மந்திரி யின் திட்டம்.

மணி திரும்பி வருவதை எதிர்பார்த்து இருவரும் புதர் மறைவில் ஒளிந்துகொண்டிருந்தார்கள். சிறைச்சாலைக்குள் கந்தன் தவிப்புடன் தன் நண்பனின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தான். வெகு நேரமாயிற்று. உச்சிவேளைகூட வந்துவிட்டது.

பளீரென்று சிறைச்சாலைக்குள் ஓர் ஒளி பரவியது. அதை அடுத்து மணியின் கம்பீரமான குரல் கேட்டது. கந்தன் துள்ளி எழுந்து ஜன்னலருகில் ஓடினான். மணியின் வாயில் ஓர் அழகிய வைரமாலை தொங்கிக்கொண்டிருந்து. சூரிய ஒளி பட்டு அதிலிருந்து கண் கூசும்படி 'டால்' வீசிற்று. கம்பி களுக்கிடையே கந்தனின் பக்கமாக அந்த வைரமாலையை மணி நகர்த்தியது. கந்தனுக்கு ஆனந்தத்தில் எதுவுமே பேசத் தோன்றவில்லை. பிறகு, "மணி இது...இது எனக்குத்தானா?" என்றான் கண்களில் நீர்மல்க. ஆம் என்பது போல அது 'வாப் வாப்' என்று குலைத்தது. வாலை ஆட்டித் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தது.

"நான் இதை அரசருக்குக் காணிக்கையாக அனுப்புவேன். அவர் என்னை விடுதலை செய்துவிடுவார். அடுத்த நாட்டிலே வைரமாலையை விற்று ஏராளமான பொருள் கொண்டுவரு வேன். அரசர் தம் ஊழியர்களின் சம்பளப் பாக்கியைக் கொடுத்து மகிழ்வார். மணி...மணி...நீ செய்யும் உதவிகளுக் கெல்லாம் நான் எப்படி என் நன்றியைத் தெரிவிப்பது?" என்றான் கந்தன், கரகரத்த குரலில்.

'வாப்...வாப்' என்றது மணி. 'என்னை நீ காப்பாற்றிய தற்கு நான் உனக்கு இன்னும் எத்தனை உதவி செய் தாலும் போதாதே' என்று சொல்வது போலிருந்தது. கந்தன் ஜன்னல் கம்பிகளின் வழியே மணியின் வெல்வெட்

உடலை வருடினான். அதன் தலையை அன்போடு தடவிக் கொடுத்தான். பிறகு, ஜெயில் காவலாளியைக் கூவி அழைத்தான். மணி, தன் நண்பனை இந்த முறையும் காப்பாற்றி விட்டோம் என்ற நிம்மதியோடு ஜன்னலிலிருந்து கீழே குதித்துக் காட்டிற்குள் ஓடலாயிற்று. அப்படி ஓடும்போது அது தன் நீல நிறப் பாதச்சுவடுகளைப் பூமியில் பதித்தபடியே சென்றது.

ஒளிந்துகொண்டிருந்த சதிகாரர்கள் மகிழ்ச்சியோடு வெளியே வந்து, நாயின் கால் அடையாளத்தைப் பின்தொடர்ந்தார்கள். தங்கள் திட்டம் வெற்றிகரமாக நிறைவேறுவதில் மிகவும் திருப்தி அவர்களுக்கு.

மணி, தன்னைச் சுற்றி ஏதோ ஒரு வித வாசனை வருவதை உணர்ந்து ஆராய்ந்தது. கால்கள் நீல நிறமாக இருப்பதைப் பார்த்தது. ஆனால், அதில் சந்தேகம் கொள்ளாமல் வேகமாகத் தன் குகையை நோக்கி ஓடலாயிற்று. வெகுதூரம் அப்படி ஓடிய மணி, வழக்கப்படி இடை இடையே நின்று சுற்றுமுற்றும் பார்த்து உற்றுக் கேட்டது. சிறிது நேரத்தில் தன்னை யாரோ தொடர்ந்து வருவதை மணி உணர்ந்து கொண்டதும், சட்டென்று தன் வழியை மாற்றிக்கொண்டு ஒரு புதர் மறைவில் போய் ஒளிந்துகொண்டது. மணியை ஏமாற்ற யாராலும் முடியாது.

சிறிது நேரத்தில் ருத்திரசிம்மரும் சிங்கமுகனும் கீழே குனிந்து குனிந்து நீல நிற அடையாளத்தைப் பார்த்துக் கொண்டு வருவதைக் கண்டது மணி. அப்போதுதான் தன் காலில் படிந்துள்ள நீல வர்ணத்தின் காரணம் அதற்குப் புரிந்தது. தன் காலையும், அவ்விருவரும் குனிந்து குனிந்து தரையிலே தன் பாதம் ஏற்படுத்திய நீல நிற அடையாளத்தைப் பார்த்துக்கொண்டு வருவதையும் கவனித்தது மணி. சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தது. இவர்களை ஏமாற்ற அதற்கா தெரியாது? வெகுவேகமாக ஓடியது. அந்தக் காட்டின் ஒவ்வொரு மூலையும் அதற்குத் தெரியும். அந்நாட்டின் பிரதான நதியான நீலவேணியின் கிளை

நதி ஒன்று அந்தக் காட்டின் நடுவே ஓடுகிறது. பாறைகளில் முட்டி மோதிக்கொண்டு ஓடும் அந்த நதியில் போய்க் குதித்தது மணி. ஆற்றின் வேகமான நீரிலே கொஞ்ச நேரம் நீந்தியது. அதன் கால்களிலிருந்த நீல வர்ணமெல்லாம் கரைந்து மறைந்தது. நதியோடு சிறிது தூரம் போய் ஒரு இடத்தில் கரையேறித் தன் இருப்பிடத்தை நோக்கி விரைந்தது நாய். இனி, தன்னை யாராலும் பின்தொடர்ந்து வரமுடியாது என்ற நிம்மதியுடன் அது தன் குகைக்குப் போயிற்று.

அரண்மனையில் கந்தனின் கதி என்னவாயிற்று என்று பார்ப்போம். சிறைக்காவலாளியிடம் வைரமாலையைக் கொடுத்துத் தன் காணிக்கையாக அதை அரசரிடம் கொடுக்கும்படி அனுப்பினான். வைரமாலையுடன் ஓடினார் சிறையதிகாரி. மாலையைக் கண்டதும் அரசர் அப்படியே பிரமித்துப்போனார். அதைப் பார்த்துக்கொண்டே இருந்தார். உடனே கந்தனை விடுதலை செய்து அழைத்துவரும்படி உத்தரவிட்டார். கந்தனைக் கண்டதும் அரசர் மகிழ்ச்சியோடு வரவேற்றார். கந்தன் அரசரின் பாதங்களில் விழுந்து வணங்கினான்.

''கந்தா! இந்த அற்புத வைரமாலை உனக்கு எப்படிக் கிடைத்தது?'' என்றார்.

''என் நண்பன் மணியைப்பற்றித்தான் முன்பே சொல்லி இருக்கிறேனே, அரசே. நான் கஷ்டப்படும்போதெல்லாம் இப்படித்தான் அது அரிய பொருள்களைக் கொண்டுவந்து கொடுக்கும்'' என்றான். அரசருக்கு ஒரே மகிழ்ச்சி. விந்தை நாய் மணியைப்பற்றிக் கந்தனைப் பல கேள்விகள் கேட்டார். வைர மாலையை விற்று அரண்மனை ஊழியர்களின் சம்பளப் பாக்கியைக் கொடுத்துவிடும்படி கந்தன் யோசனை கூறினான்.

''இதை விற்கவே எனக்கு மனமில்லை...ம்...ஆனால் அரண்மனையிலே புரட்சி நடவாமல் தடுக்கவேண்டுமே'' என்று பெருமூச்சுடன் தனாதிகாரியை அழைத்து, ''இந்த வைர மாலையை வாங்குபவர்கள் இந்த நாட்டிலோ பக்கத்து நாடுகளிலே இருப்பார்களானால் இதை விற்றுப் பணமாக்கிக் கொண்டு வா; போ. விரைவில் வரவேண்டும்'' என்றார்.

"அந்நிய நாட்டு நகை வியாபாரி ஒருவர் நம் நாட்டுக்கு வந்திருக்கிறான். அவரைப் போய்ப் பார்த்து வருகிறேன்" என்று வைரமாலையுடன் சென்றார் தனாதிகாரி. அரண்மனையில் மறுபடி கலகலப்புக் குடிகொண்டது. சிறிது நேரத்திற்கெல்லாம் பத்து வீரர்கள் பொன் முடிப்புகளைச் சுமந்துவர, தனாதிகாரி அரசன்முன் வந்து நின்றார்.

"அந்நிய நாட்டு நகை வியாபாரி அந்த வைரமாலை விலை மதிக்க முடியாதது என்றும், அதை வாங்கும் பொருள் தம்மிடம் இல்லை என்றும் சொன்னார். முடிவில் தம்மிடமுள்ள ஐம்பதி னாயிரம் பொற்காசுகளுக்குத் தருவதானால் வாங்கிக்கொள்ளுவ தாகச் சொன்னார். விற்றுவிட்டேன்" என்றார் தனாதிகாரி. அரசரின் முன்னே பொன்னைக் கொட்டிக் குவித்தார்கள் வீரர்கள்.

அரசரின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. "கந்தா, உன்னால் என் கவலையெல்லாம் பறந்தது; என் பொக்கிஷம் நிறைந்தது. இந்தப் பொருளில் என் படை வீரர்களுக்குக்கூட தீபாவளிப் பரிசு வழங்கிவிடலாம் போலிருக்கிறதே ......ஆம் அதுதான் சரி, அப்படியே செய்கிறேன்" என்று அரண்மனை ஊழியர்களுக்கும் படை வீரர்களுக்கும் சம்பளப்பாக்கியோடு விசேஷப் பரிசாக இனாமும் கொடுத்தார். அப்படியும் பணம் மீதமிருந்தது.

"கந்தா, இன்று இத்தனை பேர்களின் மகிழ்ச்சிக்குக் காரணமான உனக்கு ஏதாவது நான் பரிசளிக்க வேண்டாவா? உனக்கு என்ன வேண்டும், கேள்?" என்றார், அரசர்.

கந்தன் தன் விருப்பத்தைத் தெரிவித்தான். தனக்குத் தனி அரண்மனை வேண்டுமென்றோ, அறுசுவை உண்டி வேண்டு மென்றோ அவன் கேட்கவில்லை. பின்னே என்ன கேட்டான் என்று நினைக்கிறீர்கள்? அந்த நாட்டின் ஏழைக் குழந்தைகள் தான் அவன் கண்முன்னே வந்து நின்றார்கள். பசியால் வாடும் அவர்களின் நினைவு வந்ததும், தான் சங்கிலியின் குடிசையில் பட்ட கஷ்டங்களை எண்ணிப் பார்த்தான். உடனே, "அரசே, இந்த நாட்டிலுள்ள குழந்தைகள் எல்லாரையும் அழைத்து ஒரு

பெரிய விருந்து வைக்க விரும்புகிறேன். அவர்கள் அடையும் ஆனந்தத்தைக்காண எத்தனை இன்பமாக இருக்கும்தெரியுமா?" என்றான் கந்தன்.

"அற்புதமான யோசனை, கந்தா! அபாரமான யோசனை! உடனே விருந்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யச் சொல்கிறேன்" என்று மந்திரி ருத்திரசிம்மரை அழைத்துவர ஆள் அனுப்பினார். ஆனால் மந்திரியைக் காணவில்லை என்று செய்தி வரவே, விருந்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைத் தாமே மேற்கொண்டார். நகரத்து மக்களுக்கெல்லாம் தண்டோரா மூலம் செய்தி அறிவிக்கப்பட்டது. ஏழைக் குழந்தைகளெல்லாம் சாரிசாரியாக அரண்மனையை நோக்கி வரலானார்கள். அரண்மனை ஊழியர்களின் உள்ளமெல்லாம் மகிழ்ச்சியால் நிரம்பி இருந்ததால் விருந்து ஏற்பாடுகளைத் தடபுடலாகச் செய்யலானார்கள். விதவிதமான பதார்த்தங்கள் தயாரிக்கப் பட்டன. அன்று பௌர்ணமி வேறு. ஆகவே குழந்தைகளுக்கு நிலாச் சாப்பாடு. கந்தன் அரண்மனை வாசலில் நின்றுகொண்டு குழந்தைகளைக் குளிர்ந்தமுகத்தோடு வரவேற்றான். மெலிந்த உடலும் கந்தலாடையும் பயந்தபார்வையும் உடைய வறுமையின் வடிவங்களான அந்தக் குழந்தைகள் விருந்து உண்ட அந்தக் காட்சியைக் கந்தன் என்றைக்கும் மறக்கவே மாட்டான்.

அரண்மனையின் முன் உள்ள பசும்புல் வெளியில்தான் குழந்தைகள் உட்கார்ந்து அறுசுவை உணவை அள்ளி அள்ளிச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். சிரிப்பும் கேலியும் கூச்சலும் கும்மாளமும் அப்பப்பா......அரசர் சுமந்திரர் தம் வாழ் நாளிலேயே அரண்மனை இத்தனை கோலாகலமாக இருந்த தைப் பார்த்ததில்லை என்றார்.

இந்தக் குதூகலத்தினிடையே இரண்டு உருவங்கள் தள்ளாடித் தடுமாறியபடி நடந்துவந்தன. உடையெல்லாம் ஒரே அழுக்கும் சேறும் பசியும், களைப்பும் வருத்த அப்படி வந்த அவர்கள் வேறு யாருமல்ல. மந்திரி ருத்திரசிம்மரும் சேனாதிபதி சிங்கமுகனுந்தாம். நாயைத் தொடர்ந்து சென்ற வர்கள் நீலநிற அடையாளம் ஓடைக்கரையோடு முடிந்து

விடவே பேராசைக்காரர்கள் பெருத்த ஏமாற்றத்துடன் காடு முழுவதும் அலைந்துவிட்டு அலுத்துப்போய்த் திரும்பி இருக்கிறார்கள்.

அரண்மனையிலே கோலாகலத்தைக் கண்டதும் கோபமாக வந்தது அவர்களுக்கு. பிச்சைக்காரக் குழந்தைகளின் முன்னே விதவிதமான பட்சணங்கள் படைக்கப்பட்டிருப்பதையும், குழந்தைகளின் கூட்டம் கும்மாளம் போட்டுக்கொண்டு உண்டு மகிழ்வதையும் கண்ட அவர்களுக்கு ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது.

"இதெல்லாம் என்ன கூத்து?" என்று எரிந்து விழுந்தார்கள், விருந்து பரிமாறிக்கொண்டிருப்பவர்களைப் பார்த்து. குழந்தைகள் குதூகலமாகச் சாப்பிடும் காட்சியைப் பார்த்துக் கொண்டே வந்த கந்தன், மந்திரியாரைக் கண்டதும் அவர் கேள்விக்குப் பதில் சொன்னான். தான் கொடுத்த வைரமாலையினால், அரண்மனை ஊழியர்களுக்கும் இராணுவத்திற்கும் சம்பளப் பட்டுவாடா ஆகிவிட்டதையும், அரசரின் உத்தரவுப் படியே இந்த விருந்து நடப்பதாகவும் சொன்னான். விவரமறிந்த மந்திரிக்கு வேதனை தாங்க முடியவில்லை. அதே சமயம் அந்த அதிர்ஷ்டந்தரும் நாயைப் பிடிப்பதில் தோல்வி கண்ட அவமானம் வேறு ஆத்திரமாக மாறியது.

"இந்தப் பரதேசிக் கும்பலுக்காக இத்தனை பணத்தைச் செலவிடுவதா? அநியாயம்...அரசர் எங்கே? அவரிடம் சில வார்த்தைகள் பேச வேண்டும்" என்று தவித்தார் மந்திரி. விருந்தைக் குழந்தைகள் இரசித்துச் சாப்பிடுகிறார்களா என்று பார்த்துக்கொண்டு அரசரும் அங்கு வந்தார். ருத்திரசிம்மரைக் கண்டதும் "மந்திரியாரே! எங்கே போயிருந்தீர்? உம்மைத் தேடாத இடமில்லை. நல்லவேளை, சமயத்துக்கு வந்தீர். விருந்துக்குப் பின் கோமாளிகளின் கேளிக்கைகளும் வேடிக்கையும் இருக்கின்றன" என்றார் அரசர் சுமந்திரர் மகிழ்ச்சியோடு. இத்தனை உற்சாகமாக அவர் என்றுமே இருந்ததில்லை.

"அரசே! இந்த அழுக்கும் அசிங்கமுமான அநாதைகளுக் காக எல்லை மீறிச் செலவுசெய்துவிட்டீர்கள். எனக்கு ஆறு

மாத சம்பளமே கொடுக்கவில்லை என்பதை நினைவுபடுத்து கிறேன்'' என்றார் ருத்திரசிம்மர் கோதிப்புடன்.

அரசருக்கு அப்போதுதான் மந்திரிக்குச் சம்பளம் கொடுக் காதது நினைவுக்கு வந்தது. தலையைச் சொறிந்து கொண்டார். ''கையில் பணம் இருந்தபோது நீர் இல்லை. இருந்திருந்தால் கொடுத்திருப்பேன். அது சரி, உமது கடமையை மறந்து கண்டபடி வெளியே சுற்றப் போகாதீர்'' என்று சொல்லிவிட்டுக் களியாட்டத்திற்கு ஏற்பாடு செய்யச் சென்றுவிட்டார்.

பாவம், ருத்திரசிம்மரும் சிங்கமுகனும் தலைவிதியே என்று குமுறும் உள்ளத்துடன், குதூகலித்து மகிழும் குழந்தை களின் மத்தியில் உட்கார்ந்தபடி, அவர்களுக்காக நடத்தப்பட்ட வேடிக்கை விளையாட்டுகளைப் பார்த்துக்கொண்டிருந்தனர். தன்னை மறந்து ஆனந்தத்தில் மூழ்கி இருந்த கந்தனை பார்க்கப் பார்க்க ருத்திரசிம்மருக்கு ஆத்திரம் குமுறிக்கொண்டு வந்தது. அப்பொழுது அந்த வஞ்சக நெஞ்சத்தில் ஒரு திட்டமும் உருவாகிக்கொண்டிருந்தது.




துந்துபி நாட்டின் ஏழைக் குழந்தைகளுக்கு முதல் நாள் இரவு நடந்த விருந்தும் கேளிக்கைகளும் முடிய வெகுநேரமாகிவிட்டது. ஆகவே, விடிந்து வெகுநேரமாகியுங்கூட யாரும் எழுந்திருக்கவில்லை. ஆனால், மந்திரி அன்று இரவு தூங்கவே இல்லை. அந்த அதிசய நாய் காத்துவரும் புதையலை எப்படி அடைவது என்று சிந்திப்பதிலேயே இரவு முழுவதும் கழித்தார்.

கந்தன் கண்விழித்ததும் இரண்டு வீரர்கள் தயாராகக் காத்திருந்தார்கள். மந்திரி ருத்திரசிம்மர் உடனே அவனை அழைத்து வரும்படி உத்தரவிட்டதாக அவர்கள் அறிவித்தார்கள். கந்தனுக்கு மந்திரியின் வஞ்சக எண்ணம் தெரியாது. ஆகவே, பரபரப்புடன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு மந்திரியின் அறைக்குச் சென்றான். வழக்கத்துக்கு விரோதமாக மந்திரி சிரித்த முகத்துடன் காணப்பட்டார். கந்தனைக் கண்டதும் அவர் அன்புடன் அழைத்து உபசாரமாகப் பேசினார். பிறகு, அரசர் அவனுக்கு ஒரு வேலை கொடுத்திருப்பதாகவும், உடனே அதை நிறைவேற்றக் கிளம்பவேண்டும் என்று சொன்னார். சூதறியாத கந்தன தன் சம்மதத்தைத தெரிவிததான்.

மந்திரி அவனிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து, "துந்துபி நாட்டின் கிழக்கெல்லையில் பூதபுரி என்றொரு கிராம

மிருக்கிறது. அந்தக் கிராமத்தின் கோடியிலே தனியாக ஒரு வீடு இருக்கும்; அந்த வீட்டில் ஒரு கிழவர் இருக்கிறார். அவரிடம் இந்தக் கடிதத்தைக் கொடுத்துப் பதில் வாங்கிவர வேண்டும். மிகவும் இரகசிய அரசாங்க விஷயம். கடிதத்தை வேறு யார் கையிலும் கொடுத்துவிடாதே'' என்று எச்சரித்து அனுப்பினார்.

கந்தனும் கொஞ்சமும் தாமதிக்காமல் பூதபுரியை நோக்கிப் பயணமானான். அவன் கிராமத்தை அடையும்போது மாலை மஞ்சள் வெயில்கூட மறைய ஆரம்பித்துவிட்டது. மந்திரி குறிப்பிட்ட வீடு கிராமத்தை விட்டு வெகு தூரத்தில் ஒதுக்குப் புறமான ஒரு இடத்தில் இருந்தது. கந்தன் அந்த வீட்டை அடைந்தபோது அதன் கதவு உட்புறம் தாளிடப்பட்டு இருந்தது. அந்த வீடும் சூழ்நிலையும் கந்தனின் மனத்தில் ஏதோ ஒருவிதப் பயத்தை உண்டாக்கின. அந்த வீட்டில் மனிதர் வசிக்கிறார்கள் என்பதற்கான எவ்வித அறிகுறியையும் காண வில்லை. நடுங்கும் கைகளோடு அவ்வீட்டின் கதவைத் தட்டினான். இருட்டிலே எங்கோ தொத்திக்கொண்டிருந்த வௌவாலொன்று படபடவென்று பறந்து சென்றது, கந்தனின் நெஞ்சு திக்திக் என்று அடித்துக்கொண்டது. பீதியுடன் கந்தன் கதவைப் படபடவென்று தட்டினான். சிறிது நேரம் கழித்து, கிரீச்சென்ற ஒலியுடன் கதவு திறந்தது. அங்கே கூனிக் குறுகிய கிழவன் ஒருவன் நின்றுகொண்டிருந்தான். அவன் உடை விநோதமாக இருந்தது, உருவத்தைப் பார்க்கவே அதிக வெறுப்பாகவும் பயமாகவும் இருந்தது. கழுகுக் கண்கள், நீண்டு வளைந்த மூக்கு, ஒட்டி உலர்ந்த உடல், புருவத்திலே உரோமம் அடர்ந்து வளர்ந்து நீட்டிக்கொண்டு இருந்தது. அந்தக் கிழவனின் பார்வையே கேள்வியாகத் துளைத்தது கந்தனை. ''சுந்தரபுரி அரசர் சுமந்திரரிடமிருந்து உங்களுக்கு ஒரு கடிதம் கொண்டுவந்திருக்கிறேன்'' என்றான் தட்டுத்தடுமாறியபடி கந்தன்.

''அரண்மனைப் பையனா நீ...வா உள்ளே'' என்றார். கந்தன் உள்ளே நுழைந்தான். கிழவர் கதவைத் தாளிட்டுக்

கொண்டு முன்னால் நடந்தார். வெளியிலிருந்து பார்த்தபோது பாழடைந்த கட்டடமாகக் காணப்பட்டாலும் உள்ளே விசால மான அறைகளும் கூடங்களுமாகக் காணப்பட்டது. வீட்டி னுள்ளே தூய்மையான வெண்மையொளி பரவி இருக்கவில்லை. இரத்தச் சிவப்பு, நீலம், பச்சை - இப்படிப் பலவித வண்ணங் களில் ஒவ்வோர் அறையும் காட்சியளித்தது. கந்தனின் நடுக்கம் அதிகமாயிற்று. தயங்கித் தயங்கி நடந்தான். ஒரு மேஜை மீது பயங்கரமான நாகப்பாம்பு ஒன்று படமெடுத்தபடி நின்று கொண்டிருந்தது. இதைக் கந்தன் நல்ல வேளையாகப் பார்க்க வில்லை. பார்த்திருந்தால் அலறியடித்துக்கொண்டு ஓடி இருப் பான்.

அந்தக் கிழவன் ஒரு மந்திரவாதி. மிகவும் கொடியவன். அவன் பெயரைக் கேட்டாலே மக்கள் நடுங்குவார்கள். மந்திரி யின் நண்பன் இந்தக் கிழவன்.

"ஏதோ கடிதம் கொண்டுவந்திருப்பதாகச் சொன்னாயே தம்பி, எங்கே இப்படிக் கொடு" என்றான் கிழவன். கந்தன் கடிதத்தை நீட்டினான். அவன் கைகள் நடுங்கின. கிழவனின் விரல் இவன் உடலில் பட்டதும் ஊசியால் குத்துவதுபோ லிருந்தது. கிழவனின் விரல்களில் நீண்டு வளர்ந்திருந்த நகம் தான் அது. கடிதத்தைக் கந்தன் நழுவ விட்டான். அங்கு நிற்பதே அவனுக்குப் பிடிக்கவில்லை.

கிழவன் கடிதத்தைப் பிரித்துப் படித்தான். அது அரசர் எழுதிய கடிதமல்ல; மந்திரிதான் எழுதி இருந்தார்.

"உனக்கு நான் எவ்வளவோ நன்மைகள் செய்திருக் கிறேன். அவைகளுக்குப் பிரதியாக எனக்கு நீ உதவவேண்டிய சந்தர்ப்பம் இப்போது வந்திருக்கிறது. இந்தக் கடிதம் கொண்டு வரும் பையனுக்கு ஒரு நாய்—அதிசயமான நாயொன்று தோழன். அதன் பெயர் மணி. அந்த நாய் ஒரு பெரிய புதையலை எங்கோ பாதுகாத்து வருகிறது. அடிக்கடி அந்தப் புதையலிலிருந்து விலையுயர்ந்த பொருள்களை அந்த நாய் இந்தப் பையனுக்குப் பரிசாகக் கொண்டுவந்து கொடுக்கிறது. நாய் காத்துவரும் அந்தப் புதையலை நான் அடைந்தாக வேண்

டும். ஆனால், மணி என்ற அந்த நாயோ மிகவும் சாமர்த்திய மானது. அதை வரவழைக்க ஓரே ஒரு வழிதான். இந்தப் பையன் ஏதாவது அபாயத்தில் சிக்கிக்கொண்டால், இவனுக்குத் துன்பம் என்றால் எங்கிருந்தாலும் இவன் உதவிக்கு வந்துவிடும். ஆகவே, அந்த நாய் என் இஷ்டப்படி, எனக்குக் கீழ்ப்படியும்படி யான ஒரு மந்திர நீரைத் தயாரித்து இந்தப் பையன் மூலம் கொடுத்தனுப்பு. அதை அந்த நாய்மீது தெளித்தால் அது நான் சொன்னபடி எல்லாம் கேட்கவேண்டும். அத்தகைய மந்திர சக்திவாய்ந்த மருந்தைக் கந்தனிடம் கொடுத்து, அதை என்னிடம் கொடுக்கும்படி சொல்லியனுப்பு.''

கடிதத்தில் மந்திரி ருத்திரசிம்மர் கையொப்பமிட்டிருந்தார். கடிதத்தைப் படித்துக்கொண்டே கிழவன் தன் கழுகுக் கண்களால் கந்தனை உற்றுப் பார்த்தான். கிழவனின் பார்வையும் பொக்கைவாய்ச் சிரிப்பும் கந்தனைக் கதிகலங்க வைத்தன.

''ஏன் தம்பி பயப்படுகிறாய்...?'' என்றான் கிழவன்.

''ப ... பயப்ப ... ப ... டவில்லையே'' என்று குழறினான் கந்தன். ''அந்தக் கடிதத்துக்கு ஏதாவது பதில் தருகிறீர்களா?'' என்று கேட்டான் அப்பாவிக் கந்தன். எப்படியாவது சீக்கிரம் அங்கிருந்து கிளம்பிவிட வேண்டும் என்று விரும்பினான். கிழவனோ கக் கக் கக் என்று சிரித்தபடி, ''பதில்தானே ? தருகிறேன், தம்பி. நீ பயப்படாமல் இப்படி வந்து உட்காரு. உன்னை அனுப்புவதற்குமுன் நான் பல காரியங்களைச் செய்தாக வேண்டும்'' என்றான். கந்தன் நடுங்கியபடியே உட்கார்ந்துகொண்டான். கிழவன் அறையின் கோடியிலுள்ள விதவிதமான வர்ண சீசாக்களிலுள்ள மருந்துகளை எல்லாம் ஒரு பெரிய கண்ணாடிப் பாத்திரத்தில் சிறிது சிறிதாக ஊற்றிக் கலக்கிக்கொண்டிருந்தான். அந்த மருந்துகள் ஒன்றோடொன்று சேரும்போது ஒரு சமயம் வர்ணப்புகைச் சுருளாகக் கிளம்பியது.மறு தடவை குப்பென்று தீ, ஜுவாலை விட்டு எரிந்தது. சில வேளைகளில் அந்தத் திரவம் பொங்கி வழிந்து கொதித்தது. இந்த விநோத மருந்துக் கலவையைத் தயாரித்துக்கொண்டே கிழவன் கந்தனிடம் பேச்சுக் கொடுத்தான்.

"தம்பி, உன் முகத்திலிருந்து சொல்கிறேன். உனக்கு எங்கோ ஒரு உத்தம நண்பன் — உயிர்த்தோழன் இருக்கிறான். ஆனால் அந்த நண்பன், மனித வர்க்கத்தைச் சேர்ந்தவனில்லை. உண்மைதானா?"

கந்தனுக்குக் கிழவனின் ஆருடம் ஆச்சரியத்தைக் கொடுத்தது. "ஆமாம் தாத்தா! என் நண்பன் ஒரு நாய். அழகான, கம்பீரமான நாய். அதன் பெயர் மணி. அந்த நாய் அடுத்த காட்டில் வசிக்கிறது" என்றான்.

கொதிக்கும் மருந்துக் கலவையைக் குலுக்கிக்கொண்டே கிழவன், "காட்டில் எங்கு வசிக்கிறதென்று தெரியாதா உனக்கு?" என்று கேட்டான்.

"தெரியாது. அதனுடன் அதன் இருப்பிடத்துக்கு நான் போனதே இல்லை" என்று தன் நண்பன் மணியைப்பற்றி உயர்வாகப் பேசிவிட்டு, "எனக்கு ஏதாவது துன்பம் ஏற்பட்டாலோ அல்லது நான் அதன் வரவை விரும்பி அழைத்தாலோ தான் அது வரும்" என்றான்.

கிழவன் கையிலுள்ள மருந்துக்கலவை பொங்கித் தணிந்து தெளிந்த நீரைப்போலக் காட்சியளித்தது, "அதாவது உன்னை யாராவது இம்சித்தால் உடனே அவர்களிடமிருந்து உன்னைக் காப்பாற்ற அது வருமாக்கும், அப்படித்தானே?" என்றான் கிழவன்.

"ஆமாம், தாத்தா. என் மணி ரொம்பப் பலசாலி. ஒரு முரட்டு மனிதனைச் சுலபமாகக் கொன்றுவிடும் ஆற்றல் படைத்தது."

"ம், கேட்கவே ரொம்ப ரஸமாக இருக்கிறதே. கந்தா, இப்படி இங்கு வா" என்று சொல்லி அவனை ஒரு அறைக்கு அழைத்துச் சென்றான். அந்த இருண்ட அறையில் பெரிய ஜன்னல் வழியே நிலவு, தரையில் பாலைக் கொட்டியது போலப் பரவி இருந்தது. கந்தனுக்கு இப்போது கொஞ்சம் பயம் குறைந்திருந்தது.

"தம்பி, அந்த ஜன்னல் வழியே வெளியே பார், என்ன தெரிகிறது?" என்றான் கிழவன். கந்தன், முன்னால் போய் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்து, "காடல்லவா?" என்றான். அவன் சொல்லி முடிக்குமுன் கிழவன் புலி போல அவன்மீது பாய்ந்து, தன் ஒரு கையால் அவன் இரு கைகளையும் முறுக்கிப் பின்னால் அழுத்திப் பிடித்துக்கொண்டு, மறு கையால் அவன் வாயை இறுகப் பொத்தி இழுத்துக்கொண்டு போனான். அடுத்த விநாடி கந்தன் ஒரு தூணோடு சேர்த்துக் கட்டப்பட்டான். எவ்வளவு முயன்றும் அவனால் விடுவித்துக்கொள்ள முடியவில்லை. இப்போதுதான் அந்தக் கிழவன் ஓர் அயோக்கியன் என்பதைக் கந்தன் உணர்ந்தான்.

"என்னை ஏன் இப்படிக் கட்டிப்போடுகிறாய்? என்னை என்ன செய்வதாக உத்தேசம்?" என்று கேட்டான் கந்தன்.

கிழவன் பயங்கரமாகச் சிரித்துக்கொண்டே, "நீ ஆபத்தில் சிக்கி இருக்கும்போது உன் நண்பன் மணி உன் உதவிக்கு வரும் என்று சொன்னாயல்லவா? இதைவிடப் பெரிய ஆபத்து உனக்கு வேறு என்ன வரப்போகிறது, சொல்? உன் அருமை நாயை நானும் சந்திக்கவேண்டாவா?" என்று சொல்லிக்கொண்டே, கந்தன் கூச்சலிட முடியாதபடி அவன் வாயை ஒரு துணியைக்கொண்டு மூடிப் பின்னால் சேர்த்துக் கட்டிவிட்டுக் கிழவன் அந்த அறையிலிருந்த ஒரு திரைக்குப் பின்னால் சென்று மறைந்தான்.

கந்தன் தன்னை விடுவித்துக்கொள்ளச் செய்த முயற்சிகள் ஏதும் பலன் தரவில்லை. கந்தன் உள்ளம் பட்ட பாடு, அப்பப்பா! தான் பெருமையடித்துக்கொண்டது போல மணி தன் உதவிக்கு இப்போது வருமா என்று ஆவலோடு ஜன்னல் வழியே காட்டை நோக்கினான். வீட்டுக்குள்ளேயோ வெளியேயோ எவ்விதச் சலனமும் - சப்தமும் இல்லை. இப்படி வெகு நேரம் கழிந்தது.

திடீரென்று காட்டில், தூரத்தில் மணியின் குரல் 'வாப் வாப்' என்று கேட்டது. கந்தனுக்கு எப்படி இருக்கும்? ஏதோ ஒரு அதிசயமான சக்தியினால் தன் நண்பனுக்கு ஆபத்து என்பதை

உணர்ந்துகொண்டு மணி உதவிக்கு ஓடி வந்துவிட்டது. என்றுமே அது கந்தனைக் கைவிட்டதில்லை. கந்தனின் முகம் மலர்ந்தது. அவன் முகபாவத்திலிருந்து திரைக்குப் பின்னால் காத்திருக்கும் கிழவன், நாய் வருகிறது என்பதைப் புரிந்து கொண்டு தயாரானான். சில விநாடிகளில், மணி ஜன்னல் வழியே பாய்ந்து வந்து, கந்தனின் அருகில் நின்றது. அந்த ஜன்னலுக்குக் கம்பி கிடையாது. கந்தனின் நிலையைக் கண்டதும் கோபமுடன் உறுமிற்று மணி. உடனே அதன் கட்டுகளை அவிழ்ப்பதில் தீவிரமாக ஈடுபட்டது. அந்தச் சமயத்தில் தன் பின்னால் ஓர் உருவம் வருவதை மணி கவனிக்கவில்லை. கந்தன், கிழவனையும் அவன் கையில் உள்ள மந்திரக் கலவையையும் பார்த்தான். ஆனால், அவன் வாய் கட்டப்பட்டிருந்ததால் தன் நண்பன் மணியை எச்சரிக்க முடியவில்லை.

கிழவன் தன் கையிலிருந்த திரவத்தை நாயின் மீது ஊற்றினான். அடுத்த விநாடி மணி தரையில் விழுந்து புரண்டது. அப்படியே சில நிமிஷங்கள் மயங்கிக் கிடந்தது. கிழவன் மௌனமாக அதையே பார்த்துக்கொண்டிருந்தான்; கந்தனுந்தான். கண் விழித்த மணி எழுந்து நின்று உடலை முரித்துக்கொண்டது. குபீரென்று கிழவன்மீது பாய்ந்து அவன் குரல்வளையைப் பிடிக்கும் என்று கந்தன் நினைத்தான். ஆனால், மணியோ ஆட்டுக்குட்டியைப் போலக் கிழவன் காலடியில் தலையைத் தொங்கவிட்டபடி போய்ப் படுத்துக்கொண்டது. அதனிடம் கம்பீரமில்லை. கிழவன் கக் கக்கக் என்று சிரித்தான். ''என் மந்திரக் கலவை சரியானபடி வேலை செய்து விட்டது. எந்தக் கொடிய ஜந்துவின் குணத்தையும் மாற்றி அடிமைப்படுத்திவிடக்கூடிய அருமையான ஔடதம் இது. அதோ பார், நல்ல பாம்பை மயக்கி என் அடிமையாக்கி இருக்கிறேன். இதோ உன் நாயையும் என் இஷ்டப்படி ஆட்டி வைக்கப்போகிறேன். மணி, மணி, இப்படி வா இங்கே'' என்றழைத்தான் கிழவன். கந்தன் தன் கண்களையே நம்ப வில்லை. மணி அந்தக் கிழவனைப் பின்தொடர்ந்து போயிற்று.

கந்தன் கூச்சலிட்டு மணியைக் கூப்பிட்டு எச்சரிக்க எண்ணினான். ஆனால், அவனால் எதுவுமே செய்யமுடியவில்லை.

"மணி, என்னை உன் இருப்பிடத்துக்கு, நீ காத்துவரும் புதையல் உள்ள இடத்துக்கு அழைத்துப்போ, சீக்கிரம்" என்று கட்டளையிட்டான் கிழவன். மந்திர சக்தியினால் மயங்கிய மணியும் ஜன்னல் வழியே வெளியே பாய்ந்து காட்டிற்குள் ஓடியது. கிழவன் தன்னைத் தொடர்ந்துவர, நின்று நின்று அவனை அழைத்துக்கொண்டு போயிற்று.

கந்தன் நிலை எப்படி இருக்கும் ? தவித்தான்; திமிறினான். புதையலைப்பற்றிக்கூட அவனுக்குக் கவலையில்லை. புதையலை அடைந்த பிறகு அந்தக் கொலைபாதகன் மணியைக் கொன்றுவிடுவானே என்றுதான் கவலைப்பட்டான். தன் பலங் கொண்ட மட்டும் கயிற்றைப் பற்றி இழுத்துத் திமிறினான். மணி தன் பற்களால் கடித்து அவனை விடுவிக்க முயன்றதில் ஓர் இடத்தில் கயிறு நைந்து போயிருந்தது. கந்தன் இப்போது பலமாக இழுக்கவே அது படாரென்று அறுந்தது; கந்தன் விடுதலையானான்.

விடுதலையானதும் அவன் தாமதிக்கவில்லை; விழுந்தடித்துக்கொண்டு ஓடினான். கிழவனின் பிடியிலிருந்து எப்படியாவது மணியைக் காப்பாற்றுவதே அவன் நோக்கம். காட்டின் வழிகளெல்லாம் அவனுக்குத் தெரியும். நல்ல நிலவு வேறு. இரவு நெடுநேரமாகிவிட்டதால் ஓநாய்களின் நடமாட்டம் இருக்குமென்று அவனுக்குத் தெரியும். ஆகவே, குறுக்கு வழியிலே மணியைச் சந்திக்க ஓடினான். வெகு தூரத்தில் கிழவன் "போ ... வேகமாகப் போ, சீக்கிரம் போ!" என்று மணிக்குக் கட்டளையிடுவது கேட்டது. கந்தன் சட்டென்று நின்றான். இதுவரை மணியைத் தொடர்ந்து அவன் போனதில்லை. ஆகவே, குகை இருக்குமிடம் அவனுக்குத் தெரியாது கந்தன் மறைந்திருந்த புதருக்குச் சற்றுத் தொலைவில் மணி போய்க்கொண்டிருந்தது. அங்கே ஒரு சிறிய பாறை. அதன் மீது தாவி ஏறிக் கிழவனையும் வரும்படி மேலிருந்தபடி "வாப் வாப்" என்று குரைத்து அழைத்தது. தன் சுய நினைவில்லாதிருக்கும் மணி, கிழவனைப் புதையல் உள்ள இடத்துக்கு அழைத்துப் போய்விடும், கிழவன் நாயைக் கொன்றுவிடுவான். இது நிச்சயம். இதைத் தடுக்கத் துரிதமாக ஏதாவது செய்

தாக வேண்டும். அருகில் கிடந்த ஓர் உறுதியான தடியைக் கந்தனின் கண்கள் பார்த்தன. மறு விநாடி கந்தனின் கரங்களில் அது இருந்தது. கிழவன் பாறைமீது தொத்தித் தொத்தி ஏறிக்கொண்டிருந்தான். பாதி தூரம் ஏறிவிட்டான். இதுதான் சரியான சமயமென்று கந்தன் தன் மறைவிடத்திலிருந்து வெளிப்பட்டு, அந்தரத்தில் ஊசலாடியபடி மேலே தாவ முயன்றுகொண்டிருந்த கிழவனின் காலைப் பிடித்து இழுத்தான். எதிர்பாராத இந்தத் தாக்குதலைச் சமாளிக்க முடியாத கிழவன் பிடி நழுவிக் கீழே விழுந்தான். விழுந்தவன் தலையில் கையிலிருந்த தடியால் ஓங்கிப் போட்டான் கந்தன். அடுத்த விநாடி கிழவன் பிரக்ஞையற்று மூர்ச்சையானான். கந்தன் கூச்சலிட்டான்: "மணி! மணி! ஓடிவா, வந்துவிடு, கீழே வா." ஆனால், பாய்ந்து ஓடி வந்த மணி பயங்கரமாகத் தன் பற்களைக் காட்டிக்கொண்டு கந்தனைக் கடிப்பதற்கு வந்தது. கந்தன் தவிப்புடன் பயந்துகொண்டு ஓடினான். "மணி! என்னைத் தெரியவில்லையா...? நான்தான் உன் கந்தன், மணி!... மணி!... அந்த மருந்தின் சக்தி இன்னும் உன்னிடமிருந்து மறையவில்லையா?" என்று பரிதாபமாகச் சொல்லிக்கொண்டே ஓடினான். ஆனால், மணியோ பயங்கரமாக உறுமிக்கொண்டு அவனைக் கடிக்கத்தான் வந்தது. கந்தன் செய்வது அறியாது தவிப்புடன் ஓடிக்கொண்டிருந்தான்.




கந்தனின் உயிர்த்தோழனான மணி—அந்த அதிசய நாய் கந்தனையே கடிக்கத் துரத்திற்று. காரணம்? அதன் புத்தியை மந்திரவாதிக் கிழவனின் மந்திரக் கலவை மாற்றிவிட்டது. மணியிடமிருந்து தப்பிக்கக் கந்தன் ஓடினான். சட்டென்று ஒரு புதர் மறைவிலிருந்து மூன்று ஓநாய்கள் வெளிப்பட்டு மணியின் மீது பாய்ந்தன. கூரான பற்களை உடைய கொடிய ஓநாய்கள் மூன்றும் ஏக காலத்தில் மணியின் மீது பாயவே, மணி தரையில் உருண்டது. கந்தன் திடுக்கிட்டுத் திரும்பினான். தன் நண்பனுக்கு ஏற்பட்ட ஆபத்தைப் பார்த்தான். மணியிடமிருந்து தப்ப ஓடியவன் இப்போது மணியைக் காப்பாற்ற ஓடி வந்தான். தரையில் விழுந்துவிட்ட மணி எழுந்திருக்க முடியாமல் தவித்தது. ஓநாய்கள் அதன்மீது தங்கள் பற்களைப் பதிக்க முயன்றன. கந்தன் தன் கையிலிருந்த தடியினால் ஓநாய்களை அடித்து அவைகளின் வெறிச் செயலைத் தன் பக்கம் திருப்பினான். இந்த இடைவேளையில் மணி குபீரென்று எழுந்தது. மணி கம்பீரமான நாய். அது நல்ல பலமுள்ள நாய். ஒரே பாய்ச்சலில் ஓர் ஓநாயின் குரல் வளையைப் பற்றிக் குதறிக் கொன்றது. கந்தன் ஓர் ஓநாயைத் தன் தடியினாலேயே அடித்துக் கொன்றான். மூன்றாவது ஓநாயை மணி துரத்திச் சென்று, அதோடு போரிட்டுக் கொன்றது.

இந்தப் போராட்டத்தில், உருண்டு புரண்டதில் மணியின் மீது மந்திரவாதி தெளித்திருந்த மந்திரக் கலவையின் சக்தி விடுபட்டுப்போய்விட்டது. வெற்றி வீரனாகத் திரும்பி வந்த மணியைக் கண்டு கந்தன் பயந்து ஓட முயன்றான். ஆனால், மணி கந்தனைக் கடிக்க ஓடி வரவில்லை. கனிவோடு பழைய மணியாகக் குழைந்து வந்தது. தோள்மீது கால்களை வைத்து ஏறி நின்று அவன் முகத்தை நக்கியது. மணிக்குப் போன உயிர் திரும்பி வந்தது. அதைக் கட்டிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தான்.

கிழவனின் நினைவு வரவே கந்தன் மணியுடன் அவன் விழுந்து கிடக்கும் இடத்திற்கு ஓடினான். அவனை அப்படியே விட்டுப்போகக் கந்தனுக்கு விருப்பமில்லை. ஆகவே, கந்தன் அந்தக் கிழவனின் ஒரு காலைப் பற்றிக்கொள்ள, மணி மற்றொரு காலைக் கௌவிக்கொள்ள இருவருமாகக் கிழவனைக் கல்லும் முள்ளும் நிறைந்த தரையில் தரதரவென்று இழுத்துக் கொண்டு அருகிலிருந்த ஓடையில் கொண்டுபோய்த் தள்ளினார்கள். சலசலத்து ஓடும் நீரில் கிழவன் அலங்கோலமாகக் கிடந்தான். உடனே கந்தன், "மணி, எனக்கு நகரத்துக்குப் போக வழி தெரியாது. நீதான் உதவவேண்டும்" என்றான். அடுத்த நிமிடம் மணி கந்தனுக்கு முன்னால் வழி காட்டிக்கொண்டு ஓடியது. நிலா வெளிச்சத்தில் ஓடுவது சிரமமாகத் தெரியவில்லை. சிறிது நேரத்தில் கந்தனைச் சுந்தரபுரிக் கோட்டையினருகில் கொண்டுவந்து விட்டது. "மணி, இனி எனக்கு வழி தெரியும். நான் போய்க்கொள்கிறேன். மணி, நீ போய்வா!" என்று அதை அணைத்து முத்தமிட்டு விடை கொடுத்தான். மணியும் காட்டில் நுழைந்து மறைந்தது.

நள்ளிரவு நேரம். கோட்டைக் கதவுகள் மூடி இருந்தன. ஆனால், கோட்டைக்குள் போகும் இரகசிய வழி கந்தனுக்குத் தெரியும். அதன் மூலமாக எவ்விதச் சந்தடியுமின்றி உள்ளே நுழைந்துவிட்டான் கந்தன். நகரமே உறக்கத்திலாழ்ந்திருந்தது. கந்தன் ஓசைப்படாமல் தன் அறையை நோக்கி நடந்தான். அறைக்குள் நுழையும்போது இருளிலே மறைந்திருந்த இரண்டு உருவங்கள் குபீரென்று கந்தன்மீது பாய்ந்து,

அவன் கூச்சலிடாதபடி வாயை அழுத்திப் பிடித்து அப்படியே அலாக்காகத் தூக்கி எங்கேயோ கொண்டுபோயின.

அந்த இரண்டு உருவமும் யார் தெரியுமா? மந்திரி ருத்திரசிம்மரும், சேனாதிபதி சிங்கமுகனுந்தான். கந்தனின் வரவை எதிர்பார்த்துத் தூங்காமல் காத்திருந்தார்கள் இருவரும். கந்தனை இருவரும் பூமியின் கீழேயுள்ள ஆயுதச் சாலைக்குக் கொண்டுபோய் விட்டார்கள். ஆயுதச் சாலையில் இவர்கள் இருந்த இடத்தைத்தவிர மற்ற இடங்களில் அந்தகாரம் குடி கொண்டிருந்தது. ஒரு மெழுகுவத்தி வெளிச்சத்தின் முன்னே கந்தன் உட்காரவைக்கப்பட்டான். அந்த மங்கிய ஒளியில் மந்திரி, சேனாதிபதி—இருவரின் முகமும் மிகப் பயங்கரமாகக் காட்சியளித்தது.

"ஏன் உனக்குத் திரும்பிவர இத்தனை நேரம்? கிழவன் கொடுத்த பொருள் எங்கே?" என்று கேட்டார் ருத்திரசிம்மர்.

"அவன்—அந்தக் கிழவன் மிகவும் கெட்டவனய்யா. அவன் என்னிடம் எவ்விதப் பொருளும் கொடுக்கவில்லை. என்னைக் கட்டிப்போட்டான். என்னைக் காப்பாற்ற மணி வந்தது. அதன்மீது ஏதோ மருந்தைத் தெளித்து மயங்க வைத்துக் காட்டிற்குள் கூட்டிச் சென்றான்." கந்தன் நடந்ததைச் சொன்னான். ஆனால் அவர்கள் அதை நம்பவில்லை.

"நீ பொய் சொல்கிறாய். அந்தக் கிழவன் அப்படிப் பட்டவனல்ல. அவன் என் நண்பன். நீதான் அவன் கொடுத்த மருந்தை அந்த நாய்மீது தெளித்து மயக்கிப் புதையல் இருக்குமிடத்தை அறிந்துகொண்டு வந்திருக்கிறாய். இதோ உன் உடையில் புழுதி. புதர்களின் வழியே போனதன் அடையாளமாக உன் உடைகளில் நாயுருவிக்கொடியின் காய்கள் ஒட்டிக் கொண்டிருக்கின்றன" என்று கந்தனின் தோள்களைப் பற்றிக் குலுக்கினார் மந்திரி.

"அப்படித்தான் இருக்கவேண்டும். பயல் பலே ஆள்! தம்பி, உண்மையைச் சொல்லிவிடு; அந்தப் புதையல் எங்கே இருக்கிறது? நீ என்ன கூச்சல் போட்டாலும் வெளியே

யாருக்கும் கேட்காது, தெரிந்ததா? உண்மையைச் சொல்லா விட்டால் உன்னை இங்கேயே கொன்று புதைத்துவிடுவோம்'' என்றான் சேனாதிபதி சிங்கமுகன்.

பாவம் கந்தன்... அவ்விருவர்களிடமும் அகப்பட்டுக் கொண்டு தவித்தான். ''ஐயோ! நான் இதுவரை எங்குமே பொய் பேசியதில்லை. பொன்னையும் பொருளையும் புதையலையும் நான் விரும்பியதில்லை. எனக்கு மணியைத் தெரியுமே தவிர, அது காத்து வருவதாகச் சொல்லும் புதையலைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது'' என்று கண் களில் நீர் மல்கக் குரல் கம்மக் கூறினான்.

ஆனால், அந்தக் கல் நெஞ்சர்களின் இரும்பு மனம் இளக வில்லை. ''சிங்கமுகா! அந்தச் சிறுபயலைப் பிடித்து அந்தத் தூணில் கட்டு. இதோ, சற்று நேரத்தில் உண்மையைக் கக்கும்படி செய்கிறேன், பார்'' என்று சொல்லி, அங்கு மாட்டி இருந்த, நுனியில் முள்கள் பொருத்தப்பட்ட சவுக்கைக் கையில் எடுத்தார் மந்திரி.

கந்தனின் குலை நடுங்கியது. சங்கிலியிடம் அடிபட்டது நினைவுக்கு வந்தது. அதைவிட இது மோசம். எப்படியும் இந்தக் கயவர்களின் பிடியிலிருந்து தப்பிவிட எண்ணினான். மந்திரி தன் அருகே வருவதற்குள் குபீரென்று பாய்ந்து, அந்தப் பாதாள அறையின் இருளை விரட்ட முடியாமல் திண்டாடிக்கொண்டிருந்த மெழுகுவத்தியைத் தட்டிவிட்டான். வத்தி கீழே உருண்டு அணைந்தது. எங்கும் ஒரே இருள்: ஒன்றும் தெரியவில்லை.

''விளக்கு! விளக்கு! — முட்டாளே, சிங்கமுகா! மோசம் போனோம்—பயல் தப்பிவிட்டால் வந்தது ஆபத்து. அரசரிடம் போய் இத்தனையும் சொல்லிவிடுவானே'' என்று இருளில் கத்தினார் மந்திரி. அங்கும் இங்கும் துழாவி ஒருவரை ஒருவர் பற்றிக் கட்டிக்கொண்டு கடுகடுத்தார்கள். இதற்குள் கந்தன் இவர்கள் கைக்கு அகப்படாமல் எங்கோ சென்று ஒளிந்து கொண்டுவிட்டான். சேனாதிபதி கீழே விழுந்து கிடந்த மெழுகுவத்தியைத் தடவித் தேடி எடுத்து, மிகுந்த சிரமத்துடன்

மீண்டும் மெழுகுவத்தியைப் பற்றவைத்துப் பார்த்தால் கந்தனைக் காணோம். இவர்களின் நிழல்தான் பூதாகாரமாக ஆடிக்கொண்டு அழகு காட்டியது.

"முட்டாளே, உன் அஜாக்கிரதையால்தான் பயல் தப்பி விட்டான். சீக்கிரம் உடனே போய் அவனைப் பிடித்தாக வேண்டும். இல்லாவிடில் வந்தது நம் தலைகளுக்கு ஆபத்து" என்று மந்திரி சேனாதிபதியுடன் நிலவறையிலிருந்து ஓடினார்.

அவர்கள் போகும் காலடி ஓசை ஓயும்வரை தன் ஒளி விடத்தைவிட்டுக் கந்தன் வெளிவரவில்லை. இரும்புக் கவசத் தின் பின்னால் ஒண்டிக்கொண்டிருந்த அவன் இப்போது ஆயுதச்சாலையில், நடுக்கூடத்தில் இருளின் நடுவே நின்று கொண்டிருந்தான். இன்னும் அவனைவிட்டு அபாயம் நீங்க வில்லை. அந்தப் பாதாள ஆயுதச்சாலையிலிருந்து அரசரின் அருகில் போய்விட வேண்டும். "மந்திரியும் சேனாதிபதியும், மணி காத்துவரும் புதையலைத் தாங்கள் அபகரித்துப் பங்கு போட்டுக்கொள்ளப் பார்க்கிறார்கள். இவர்களின் பேராசையை, கெட்ட எண்ணத்தை, கொடூரத்தை அரசர் அறிவாரானால்..." என்று எண்ணியவாறு கந்தன் இருட்டில் வெளியேறும் வழியை ஆராய்ந்துகொண்டிருந்தான். பல கூடங்களையும் அறைகளை யும் கடப்பதை உணர்ந்தாலும் வெளியேறும் படிகள் தட்டுப் படவே இல்லை. அடிக்கடி எதன்மீதெல்லாமோ மோதிக் கொண்டு தடுமாறினான். இவன் கால்மீது ஏறி ஓடியது எலி களாகத்தான் இருக்கவேண்டும். கந்தன் அந்த இருளடைந்த குகையில் வழி தவறி அலைந்துகொண்டிருந்தான். அலைந்து அலைந்து அலுத்துப்போன கந்தனுக்கு வெளியேறும் படி களைக் காணாதது அழுகையாக வந்தது.

திடீரென்று எங்கிருந்தோ குளிர்ந்த காற்று அவன் முகத் தில் பட்டது. அப்படியானால் வெகு சமீபத்தில்தான் வழி இருக் கிறது என்று உணர்ந்தான் கந்தன். சிறிது நேரத்தில் குளிர்ந்த காற்று வரும் இடத்திற்குச் சென்றான் கந்தன். அது வெளி யேறும் வழியல்ல. பூமி மட்டத்தில் பாதாள அறைக்காக அமைக்கப்பட்ட ஜன்னல். கந்தனுக்கு ஏமாற்றமாக இருந்தது.

எவ்வி, எவ்வி அதைப் பற்ற முயன்றான். முடியவில்லை. அந்த இரும்புக் கம்பி மூடியை அகற்றினால் கந்தனுக்கு விடுதலை. ஆனால், அது எப்படி முடியும்? அந்த ஜன்னல் மூலமாக வானத்து நட்சத்திரங்களைத்தான் அவனால் பார்க்க முடிந்தது. ''உதவிக்கு யாரையாவது கூவி அழைக்கலாம். ஆனால் தன்னைத் தேடியலையும் ருத்திரசிம்மர் காதில் அது விழுந்தால்...' அந்த எண்ணத்தையும் கைவிட்டான் கந்தன்.

செய்வதறியாது அந்த ஜன்னலின் கீழேயே உட்கார்ந்திருந்தான் கந்தன். மற்ற இடங்களைவிட அந்த இடம் சௌகரியமாக பயமில்லாமல் இருந்தது. திடீரென்று ஜன்னல் கம்பிகளில் ஒரு விதச் சப்தம் உண்டாயிற்று. ஏதோ ஒரு ஜந்து முகரும் ஓசையும் கேட்டது. கந்தன் துள்ளி எழுந்தான். உற்றுப் பார்த்தான். உச்சிமீதுள்ள ஜன்னல்களில், அது என்ன மிருகம்? அது அவனுடைய மணியேதான்... கந்தனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. ''மணி... மணி'' என்று ஆனந்த மிகுதியால் கூவிவிட்டான். அதுவும் 'வாப் வாப்' என்று குரல் கொடுத்தது.

''மணி, நான் மறுபடி ஆபத்தில் சிக்கிக்கொண்டிருக்கிறேன் என்று உனக்கு எப்படித் தெரிந்தது? மணி... என் அருமை மணி, நான் இந்தப் பாதாள அறையிலிருந்து வெளியே வரவேண்டும். அந்த ஜன்னலை என்னால் எவ்விப் பிடிக்க முடியவில்லை'' என்றான் கந்தன். மணி தன் மூக்கை அந்தக் கம்பிகளுக்கிடையே வைத்து உள்ளே பார்த்தது. பிறகு, சுற்றிச் சுற்றி வந்தது. மணியைக் காணாத கந்தனுக்கு கவலையாக இருந்தது. ஆனால், சில நிமிஷங்களில் அதன் பற்கள் கம்பியிலே உராயும் ஒலியை அடுத்து, அந்த இரும்புக் கிராதியிட்ட மூடி ஒரு புறமாக நகர்ந்து விழுந்தது. மணி தன் உறுதியான வாயினால் அந்த இரும்பு ஜன்னலைக் கௌவி இழுத்து நகர்த்தித் திறந்துவிட்டது.

உள்ளே எட்டிப் பார்த்து 'வாப்' என்று குரல் கொடுத்தது மணி. வழி ஏற்பட்டும் கந்தனால் வெளியேற முடியவில்லை. ''மணி, என்னால் அதை எவ்விப் பிடிக்க முடியவில்லை.

ஏறித் தாவவும் வழி இல்லை'' என்றான் கந்தன். அவன் குரலில் ஏமாற்றம் தொனித்தது. அடுத்த விநாடி கம்பீரமான அந்த நாய் நிலவறைக்குள் பாய்ந்தது. கந்தனின் அருகில் வந்து நின்றதும் அவன் கைகளில் தன் வாயில் கௌவிக் கொண்டு வந்த எதையோ கொடுத்தது. ''இது என்ன, மணி?'' என்று வியப்போடு மேலிருந்த துவாரத்திலிருந்து இலேசாகத் தெரிந்த நிலவொளியில் அதைப் பார்த்தான். அது ஒரு அழகிய முத்துமாலை. உயர்ந்த நல்முத்துகள். ''இது எதற்காக, மணி...? இனிமேல் இதை எல்லாம் எனக்குக் கொண்டுவந்து கொடுக்காதே'' என்றான் கந்தன்.

''என்னைக் கிழவனிடமிருந்து காப்பாற்றவில்லையா நீ. அதற்கு என் நன்றியை நான் எப்படித் தெரிவிப்பது ? இப் படித்தான்'' என்று சொல்வதுபோல மணி அவனைப் பார்த்தது. பிறகு, சுவரின்மீது தன் முன்னங்கால்களை வைத்துக்கொண்டு நின்றது. 'வாப் வாப்' என்று மெதுவாகக் குரைத்தது. 'என் முதுகுமீது ஏறி உச்சியிலுள்ள ஜன்னலைப் பற்றிக்கொண்டு வெளியேறு' என்று உத்தரவிடுவது போலிருந்தது அதன் குரல். கந்தன், மணியின் உறுதியான தோள்களின்மீது ஏறி வெளியே வந்தான். அவன் அரண்மனைத் தோட்டத்தில் அரசரின் அறைக்கு அருகே நின்றுகொண்டிருந்தான். பாதாள அறையின் ஜன்னல் மூடி அங்குதான் இருந்தது. அந்த இருட்டு உலகத்திலிருந்து விடுபடுவோம் என்று கந்தன் நினைக்கவே இல்லை. மணியும் ஒரே தாவலில் மேலே வந்து கந்தனுடன் சேர்ந்துகொண்டது. அதே சமயம் யாரோ இருவர் பேசிக்கொண்டு அந்தப் பக்கமாக வருவதை உணர்ந்தான். கந்தன் சட்டென்று அருகிலிருந்த மல்லிகைப் புதரின் பின்னே மணியையும் இழுத்துக்கொண்டு போய் மறைந்துகொண்டான். வந்தது ருத்திரசிம்மரும் சிங்கமுகனுந்தாம். ''கந்தன் தப்பியது உன்னால்தான்'' என்று இருவரும் ஒருவரை ஒருவர் குற்றம் சாட்டியபடி வந்துகொண்டிருந்தார்கள். கீழே காலடி யில் பாதாள அறையின் ஜன்னல் மூடி திறந்திருப்பதைக் கவனிக்கவில்லை. மந்திரி ருத்திரசிம்மர் தொபீர் என்று அதற்குள் விழுந்தார். தன் அருகே வந்துகொண்டிருந்த மந்திரி திடீரென்று மாயமாக மறையவே அப்போதுதான்

சிங்கமுகன் நிலவறைத் துவாரத்தைப் பார்த்தார். மந்திரி இதற்குள் விழுந்துவிட்டார் என்பதை அறிந்ததும் குனிந்து எட்டிப் பார்த்து, "மந்திரியாரே ... அடி பலமாகப் பட்டு விட்டதா?" என்று கேட்டார். அதே சமயம் கந்தனின் அணைப்பிலிருந்து மணி திமிறிக்கொண்டு குனிந்து பார்த்துக் கொண்டிருந்த சிங்கமுகனின் முதுகில் போய் வேகமாக முட்டி, அவனையும் அதற்குள் தள்ளியது. ஓலமிட்டபடி அவனும் அதற்குள் விழவே மணியும் அதற்குள் குதித்தது. சிறிது நேரம் அவர்களின் ஓலமும் மணியின் உறுமலும் கேட்டது. பாவம், அந்த இருட்டிலே மணி அவர்களை என்ன பாடு படுத்தியதோ?

சிறிது நேரத்தில் கந்தனின் அருகில் வெற்றிப் பெருமிதத் தோடு வந்து நின்றது மணி. தன்னைத் துன்புறுத்தியவர் களுக்கு மணி சரியான பாடம் கற்பித்துவிட்டு வந்ததில் கந்த னுக்கு மிக்க மகிழ்ச்சி.

உள்ளே இருட்டில் உருண்டு புரண்டு, உடையெல்லாம் மணியினால் கிழிக்கப்பட்டு, உடலெல்லாம் கீறப்பட்டு, அலங் கோலமான நிலையில் ஒருவருக்கு மற்றவர் உதவ நிலவறையி லிருந்து வெளியேறி மேலே வந்தார்கள். நிலவறைக்குள் இவர்கள் போட்ட கூச்சலும், மேலே வந்து ஒருவரை ஒருவர் நிந்தித்துக்கொண்ட சப்தமும் சேர்ந்து அரசரின் தூக்கத்தைக் கெடுத்துவிட்டது. மாடியிலிருந்த அரசர் தம் ஜன்னலைத் திறந்துகொண்டு எட்டிப் பார்த்தார். நிலவொளியிலே மந்திரி யையும், சேனாதிபதியையும் கண்ட அவருக்குக் கோபம் தாங்க வில்லை.

"மந்திரியாரே, சேனாதிபதியாரே, இதென்ன நள்ளிரவில் கூச்சல்? என் இந்த அலங்கோலம்? நாளைக் காலை தர்பார் மண்டபத்தில் இதற்குக் காரணம் சொல்லியாக வேண்டும். கூச்சலிடாமல் போய்ப் படுத்துக்கொள்ளுங்கள்" என்று உத்தர விட்டுவிட்டு ஜன்னலை மூடிக்கொண்டார்.

பாவம், அந்த இருவரும் பரிதாபமாகத் தொங்கிய தலை யுடன் அரண்மனைத் தோட்டத்தைவிட்டு வெளியேறினார்கள். கந்தனும் மணிக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டுத் தன அறைக்குப் படுக்கச் சென்றான்.



## விநோத வரி வசூல்

அன்று அரசர் சுமந்திரரின் தர்பாரிலே ஏகக் கூட்டம். நாட்டு மக்களெல்லாங்கூட வந்து கூடி இருந்தார்கள். முதல் நாள் இரவு மந்திரி ருத்திரசிம்மரும் சேனாதிபதி சிங்கமுகனும் குடித்துவிட்டுப் போதையில் அரசரின் அரண்மனைத் தோட்டத்தில் கண்டபடி கூச்சல் போட்டுக்கொண்டிருந்ததையும், உடல் உடை எல்லாம் புழுதி படிந்து அலங்கோலமான நிலையில் இருந்ததையும் அரசர் பார்த்துவிட்டாராம். தம் அமைதிக்குப் பங்கம் விளைவித்ததற்காகவும், கௌரவமுள்ள பதவியிலுள்ள அவர்கள் கேவலமாக நடந்துகொண்டதற்காகவும் அரசர் அவ்விருவர்மீதும் கோபங்கொண்டு இருக்கிறாராம். இருவரையும் இன்று சபையில் விசாரித்துத் தண்டனை விதிக்கப் போவதாகச் செய்தி ஊரெல்லாம் பரவிவிட்டது.

அரசர் சுமந்திரர் சிங்காதனத்தில் வீற்றிருந்தார். அருகே கந்தன் அரசாங்க உடையில் அழகாக வீற்றிருந்தான். மந்திரியும் சேனாதிபதியும் குனிந்த தலையுடன் அரசர்முன் நின்றுகொண்டிருந்தார்கள். இரவு நடந்தது அவ்வளவையும் கந்தன் அரசரிடம் சொல்லி இருப்பான் என்றும், அதைப்பற்றி அரசர் கேட்டால் எப்படி, என்ன சொல்லிச் சமாளிப்பது என்றும் யோசித்துக்கொண்டிருந்தார்கள். ஆனால், அவர்கள் நினைத்ததுபோலக் கந்தன் அரசரிடம் எதையும் சொல்ல

வில்லை. சொன்னாலும் சிறுவனான தன் பேச்சை அரசர் நம்ப மாட்டார் என்று கந்தனுக்குத் தெரியும்.

அரசர் விசாரணையை வளர்க்கவில்லை. மந்திரியையும் சேனாதிபதியையும் ஆறு மாதத்திற்கு நாடு கடத்திக் கருங் கோட்டைக்குப் போய் வசிக்கும்படி உத்தரவிட்டார், குற்ற வாளிகளைக் கொண்டுபோய் அடைக்கும் இடம் கருங்கோட்டை. அங்கு இரவில் குளிர் தாங்க முடியாது. நல்ல சாப்பாடு கிடையாது. கொசுவும் எலிகளும் தரும் தொல்லை சகிக்க முடியாது. இருவரையும் காலொடிந்த கிழட்டுக் குதிரை மீதேற்றிக் கருங்கோட்டைக்கு அனுப்பினார்கள்.

அரசர் தர்பாரை விட்டுக் கிளம்பும் சமயத்தில் கானகத்துக் காவலாளி ஓடோடி வந்தான். அரசர் அவன் வந்த காரணத்தைக் கேட்டார். வில்லேந்தி, புலித்தோல் ஆடை அணிந்து கம்பீரமாகக் காட்சியளித்த அவன், "மன்னர் மன்னவா! பல நாள்களாக நம் எல்லைக்குட்பட்ட கானகத்தி லுள்ள புள்ளிமான்களைக் கொன்று வந்த ஒரு கொடிய மிருகத்தைப்பற்றி ஏராளமாகப் புகார்கள் வந்துகொண்டிருப்பது தங்களுக்குத் தெரியும். அது ஒரு பயங்கர ஓநாயோ என்று நான் எண்ணி வந்தேன். அதைப் பிடிக்க முயன்று வந்தேன்."

"முயற்சி வெற்றியடைந்ததா? அந்த மிருகம் ஓநாய் இல்லாவிடில் வேறு என்ன? கரடியா?" என்று கேட்டார் அரசர்.

"இல்லை அரசே! ஒரு கொழுத்துப் பருத்த நாய். நேற் றிரவு மூன்றாம் சாமத்தில் நான் வைத்திருந்த கண்ணியில் வந்து சிக்கிக்கொண்டது. வீட்டில் வளர்க்கும் நாயானால் அந்த வேளையில் அங்கு அதற்கு என்ன வேலை? அதைக் கொன்றுவிடலாமா என்று கேட்கவே வந்தேன்" என்றான் கானகத்துக் காவலாளி.

"கொல்ல வேண்டியதுதான். ஆனால், பல மான்களைக் கொன்ற அத்தகைய கொடிய நாயை நான் பார்க்க விரும்பு கிறேன். கொண்டுவந்திருக்கிறாயா?" என்று கேட்டார் அரசர்.

கானகத்துக் காவலாளி தன்னோடு வந்திருந்தவனிடம் ஏதோ சொல்ல, அரண்மனை வாசலில் கட்டிப் போட்டிருந்த நாயை இரண்டு பேர் ஒரு குச்சியில் சுமந்தபடி அரசர் முன் கொண்டுவந்தனர். அதன் கால்களை ஒன்றாகச் சேர்த்துக் கட்டி, அதன் இடையே ஒரு குச்சியை நுழைத்துக் குழந்தையைத் தூளி கட்டித் தூக்கி வருவது போலத் தலைகீழாக அதன் உடல் தொங்கக் கொண்டுவந்தார்கள். இத்தனை நேரமும் அரசர் அருகிலேயே நின்றபடி கவனித்துக்கொண்டிருந்த கந்தன் நாயைக் கண்டதும்,

"ஐயா, இது என் மணியல்லவா? என் அருமைத் தோழனான இது யாருக்கும் எவ்விதத் தீங்கும் செய்யாதே" என்று கத்திவிட்டான். கந்தனின் குரலைக் கேட்ட மணியும் பரிதாபமாக முனகியது. அரசர் முன் இருக்கிறோம் என்பதையும் மறந்து கந்தன் மணியின் அருகே ஓடினான்.

அரசருக்குக் கந்தனின் செயல் கோபத்தை உண்டாக்கியது. "கந்தா, இதென்ன கொஞ்சமும் மரியாதை இல்லாமல்... உன் நாய் என்றால் இரவிலே காட்டில் அதற்கு என்ன வேலை?" என்றார் கடுமையாக.

"என் மணி காட்டில்தான் வசிக்கிறது, அரசே. நேற்று இரவு நான் ஒரு பெரிய ஆபத்தில் சிக்கி இருந்தேன். என்னைக் காப்பாற்ற வந்த மணி திரும்பிச் செல்லும்போது கண்ணியில் மாட்டிக்கொண்டிருக்கிறது" என்று படபடவென்று பேசினான். பேசிவிட்ட பிறகு, தான் வாய் தவறி முதல் நாள் இரவு விஷயத்தை உளறிவிட்டோமே என்று வேதனைப்பட்டான்.

"ஆபத்தா...!என்ன விதமான ஆபத்து? இத்தனை நேரம் அதைப்பற்றி நீ ஏன் சொல்லவில்லை?" என்று கேட்டார் அரசர்.

உண்மையைச் சொன்னால் குழப்பம் அதிகமாகுமென்று உணர்ந்த கந்தன் சட்டென்று சமாளித்துக்கொண்டான். முதல் நாள் இரவு மணி பரிசாகக் கொடுத்த முத்துமாலையை மடியிலிருந்து எடுத்தான். அது அவன் கையில் ஒளி வீசிக் கொண்டு ஒய்யாரமாக ஆடியது.

"இதை நேற்றிரவு தொலைத்துவிட்டேன். இதைத் தேடிக் கொடுக்கவே மணி வந்தது" என்றான்.

முத்துமாலையைக் கண்டதும் அரசருக்கு மற்றவை எல்லாம் மறந்துவிட்டன. வியப்புடன் அதை வாங்கிப் பார்த்தார். அதன் அழகில் மயங்கிப்போய் "கந்தா! இத்தனை விலையுயர்ந்த முத்துமாலை உனக்கு எப்படிக் கிடைத்தது?" என்றார்.

"இந்த நாய்தான் இதை எனக்குக் கொடுத்தது, அரசே. இந்த அதிசய நாயின் அற்புதச் செயல்களைப்பற்றித்தான் உங்களுக்குச் சொல்லி இருக்கிறேனே. மோதிரத்தையும் வைரமாலையையுங்கூட இதுதான் எனக்குக் கொண்டுவந்து கொடுத்தது. ஆனால், இவைகளை எல்லாம் எங்கிருந்து கொண்டுவருகிறது என்று மட்டும் தெரியாது" என்றான் கந்தன்,

முத்துமாலை கையிலுள்ள மகிழ்ச்சியில் அரசருக்கு கந்தனின் பேச்சு எதுவுமே காதில் விழவில்லை.

"மிகவும் சுவாரஸ்யமாக இருக்கிறதே....அந்த நாயின் கட்டுகளை அவிழ்த்து விடுதலை செய்யுங்கள். இத்தனை அறிவுள்ள நாய்க்கு நாம் துன்பம் செய்யக்கூடாது. மான்களைக் கொன்றாலும் பரவாயில்லை" என்றார் அரசர்.

"என் மணி அம்மாதிரியான கொடிய செயல்களைச் செய்யாது, அரசே. என்ன, நான் சொல்லுவது சரிதானா. மணி?" என்றான். விடுதலையடைந்த மணியும் 'ஆம்'என்பது போல "வாப் வாப்" என்று குரைத்தது.

"இத்தனை அறிவுள்ள நாயை நான் பார்த்ததே இல்லை. ம்...ஆனால், என் நாட்டிலுள்ள மான், கோழி முதலியவற்றைக் கொன்று ஏராளமான சேதம் விளைவித்து வந்திருக்கிறது. அந்த நஷ்டத்திற்கு ஈடு செய்தாக வேண்டும்" என்றார் அரசர். முத்துமாலையைச் சுழற்றிக்கொண்டே.

கந்தன் அரசரின் உள்ளத்தை அறிந்துகொண்டான். அவர் அந்த முத்துமாலையை விரும்புகிறார் என்பது அவனுக்குத்

தெரிந்துவிட்டது. ஆகவே, ''என் தோழன் மணி நீங்கள் சொல்லும் குற்றங்களைச் செய்யவில்லை. இருந்தாலும் யார் செய்த தவறுக்கோ நான் உங்களுக்கு நஷ்ட ஈடாக இந்த முத்துமாலையைக் கொடுத்துவிடுகிறேன். என் மணியை மன்னித்துவிடுங்கள்'' என்றான்.

அரசர் சிரித்துக்கொண்டே, ''தம்பி, இலஞ்சம் கொடுத்துக் காரியத்தைச் சாதித்துக்கொள்ள நினைக்கிறாயா? ம்... பொருளுக்காக ஆசைப்படுபவனல்ல நான். பரவாயில்லை, உன் மணிக்கு நான் மன்னிப்பளிக்கிறேன். உன் ராஜ விசுவாசத்தின் அறிகுறியாக இந்த முத்துமாலையை ஏற்றுக்கொள்ளுகிறேன். உன் நாயை நீ விரும்பினால் அரண்மனையிலேயே வைத்துக் கொள்ளலாம்'' என்று சொல்லிவிட்டு எழுந்தார். கானகத்துக் காவலாளிக்கு விடை கொடுத்து அனுப்பினார். பிறகு உள்ளே போகக் கிளம்பினார்.

விடுதலையாகி அரசரின் மன்னிப்பைப் பெற்ற தன் நண்பன் மணியைக் கட்டியணைத்து முத்தமிட்டான்.

''மணி, உன் மகிழ்ச்சியை அரசருக்குத் தெரிவிக்க வேண்டாவா?'' என்றான் கந்தன். உடனே மணி வாலை ஆட்டிக்கொண்டு அரசரின் அருகே சென்று, தன் முன்னங் கால்கள் இரண்டையும் அவர் தோள்மீது வைத்து எவ்வி நின்று அவர் முகத்தை நக்கியது. அரசர் சுமந்திரர் நாயின் செயலைக் கண்டு மகிழ்ந்து போனார். ஒரு நாய்க்கு மன்னிப்பு வழங்கியதில் — விலை மதிப்பற்ற முத்துமாலை கிடைத்ததில் அவருக்கு மகிழ்ச்சி. கந்தன் அவரிடம் வந்ததிலிருந்து அவருக்கு இலாபந்தான்.

''நாலுகால் நண்பனே! உன் நன்றியைத் தெரிவித்தது போதும்'' என்று சொல்லிச் சிரித்தபடி கால்களைப் பற்றித் தரையில் வைத்துவிட்டு, அதனிடமிருந்து விடுதலையடைந்து, விடைபெற்றுக்கொண்டு உள்ளே சென்றார்.

அரசர் சென்றதும் மணி, கந்தனின் கையில் எதையோ கொடுத்தது. அது முத்துமாலைதான். கந்தனுக்கு வியப்புத்

தாங்கவில்லை. "மணி...இது என்ன காரியம்!" என்றான் பொய்க் கோபத்துடன். தான் செய்யாத குற்றத்துக்கு அபராதமாக அரசருக்கு முத்துமாலையைத் தருவதில் அதற்கு விருப்பமில்லை. ஆகவே, அவர்மீது தாவி விளையாடும்போது அவர் சட்டைப்பையிலே போட்டுக்கொண்டிருந்த முத்து மாலையை மெதுவாகக்கௌவி எடுத்துக்கொண்டது. அரசருக்கு ஞாபக மறதி அதிகம் என்ற விவரம் கந்தனுக்குத் தெரியும். ஆகவே, முத்துமாலை தன்னிடமே திரும்பிவந்ததனால் ரகளை ஏதும் ஏற்படாது என்ற நிம்மதியோடு தன் மணிக்கு விடை கொடுத்து அனுப்பினான்.

மந்திரியும் சேனாதிபதியும் நாடு கடத்தப்பட்டதில் கந்தனுக்குப் பரம திருப்தி. கந்தனுக்கு மட்டுமல்ல. நாட்டில் எல்லோருமே அவ்விருவரையும் கருங்கோட்டைக்கு அனுப்பியதில் ஆனந்தமடைந்தார்கள். ஆறு மாதமானாலும் அந்த வாழ்வு அவர்கள் நடத்தையில் மாறுதலை உண்டாக்கும்.

கந்தன் தன்னிடமுள்ள முத்துமாலையை என்ன செய்வது என்று சிந்தித்தான். எப்போதுமே அவனுக்குச் செல்வத்தின் மீது விருப்பம் கிடையாது. அப்படியே கையில் பொருளிருந்தாலும் அதைப் பிறர் நலத்திற்காக—அவர்கள் மகிழ்ச்சிக்காகச் செலவிடுவான். ஆகவே, இந்த முத்துமாலையை அடுத்தநாட்டு அரசகுமாரியிடம் விற்றுப் பணமாக்கிக் கொண்டுவரத் தீர்மானித்துக் கிளம்பினான்.

மறுநாள் காலை. கந்தன் அரண்மனையை நோக்கி நடந்து கொண்டிருந்தான். அவன் தோளிலே ஒரு பெரிய பை. தூக்க முடியாமல் அதைச் சுமந்தபடி வந்துகொண்டிருந்தான். அந்த பையில் இருந்தது என்ன தெரியுமா? தங்க மொகராக்கள் இரண்டாயிரம் மொகராக்கள் - முத்துமாலையை வாங்கிக் கொண்டு அடுத்த நாட்டு இளவரசி கொடுத்த பணம் அது.

கந்தனைப் போலவே சுந்தரபுரி மக்களும் அன்று அரண்மனையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார்கள். ஆனால், அவர்கள் முகங்களில் மகிழ்ச்சி இல்லை. என் தெரியுமா? அன்று குடியானவர்கள் தங்கள் வரிப்பணத்தைச் செலுத்தும்

நாள். ஒவ்வொரு குடியானவனும் தாங்கள் செலுத்தவேண்டிய வரியான ஒரு பவுனை தங்கள் குடும்பத்திலுள்ள ஒரு நபரிடம் கொடுத்து அரண்மனைக்கு அனுப்புவார்கள். தனாதிகாரி முன் விரித்து வைக்கப்பட்டுள்ள பெரிய கணக்குப் புத்தகத்தில் குடியானவர்களின் பெயர்கள் வரிசையாக இருக்கும். அவர் கூப்பிடக் கூப்பிட ஒவ்வொருவராகத் தங்கள் வரிப்பணத்தைச் செலுத்திவிட்டுப் போகவேண்டும்.

வரி செலுத்தாதவர்களை அரசர் கடுமையாகத் தண்டிப்பார். பாக்கியை அடுத்த ஆண்டு சேர்த்துக் கட்ட வேண்டும். பல வருஷங்களாக வரி செலுத்தாத குடியானவர்களுங்கூட இருந்தார்கள்; அரசரோ ரொம்ப நல்லவர். ஆனால், இந்த வருஷம் கஜானா காலியாக இருந்ததைப் போல எந்த வருஷமும் இருந்ததில்லை. ஆகவே, அரசர் கண்டிப்பாக, இந்த வருஷம் வரி செலுத்தாதவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்படும் என்று எச்சரித்தார்.

அப்படி இருந்தும் வரிப்பணத்துடன் பத்துக் குடியானவர்கள்தாம் வந்திருந்தார்கள். அவர்களை முன்னால் விட்டுவிட்டுப் பின்னால் மற்ற குடியானவர்களெல்லாம் வெறுங்கையுடன் என்ன செய்வது என்று தெரியாமல் நின்றுகொண்டிருந்தார்கள். தங்களுள் ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்து இந்த வருஷம் தங்களுக்குச் சலுகை அளிக்கும்படி கேட்பதென்று முடிவுசெய்திருந்தார்கள். இருந்தாலும் அவர்களுக்கு அரசர் என்ன செய்வாரோ என்ற பீதி இருந்தது.

இந்த நிலையில்தான் கந்தன் பவுன் மூட்டையுடன் அரண்மனை வாசலுக்கு வந்தான். சுமையின் பளு தாங்காமல் அதை இறக்கி வைத்துவிட்டு, முகத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்துக்கொண்டான். அதற்குள் அரண்மனை வாசலின் பெரிய இரும்புக் கதவு திறக்கப்பட்டது. வரிகட்ட வேண்டியவர்கள் ஒவ்வொருவராக உள்ளே போகலானார்கள். அரசர் உயர்ந்த ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார். கீழே தனாதிகாரி கணக்குப் புத்தகத்துடன் உட்கார்ந்திருந்தார்.

வரிப்பணத்துடன் வந்திருந்த பத்துப் பேர் துரிதமாக உள்ளே போனார்கள். அதன் பிறகு? மற்றவர்களுக்கு உள்ளே போகத் தைரியமில்லை. காரணம், அரசர் அங்கே கோபமுடன் கத்திக்கொண்டிருந்தார். வரிப்பணம் வராமல் அவரால் எப்படி ராஜ்யம் நடத்த முடியும்?

கவலை தோய்ந்த முகத்துடன் நிற்கும் குடியானவர்களிட மிருந்து விவரத்தை அறிந்துகொண்டான், கந்தன். உடனே, ஒரு முடிவுக்கு வந்தான். அவன் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. டக்கென்று பையை அவிழ்த்தான். அதிலுள்ள பவுன் காசுகளை அள்ளி எடுத்தான். வரிசையாக நிற்கும் குடியானவர்களிடம் போய் ஒவ்வொருவரும் எவ்வளவு வரி கட்ட வேண்டுமோ அதைக் கேட்டு, அந்தத் தொகையை எண்ணி, அவர்கள் கையில் கொடுத்தான். குடியானவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. விழித்தார்கள்.

"இந்த வருஷம் நாட்டிலுள்ள குடியானவர்களெல்லாம் வரி செலுத்திவிட வேண்டும் என்பது அரசருடைய விருப்பம். அதற்காகத் தன் பொக்கிஷத்திலுள்ள பணத்தை எடுத்து அனுப்பி இருக்கிறார். கணக்குப் புத்தகத்தில் பாக்கி நிற்பது அவமானமல்லவா? ஆகவேதான் இந்த ஏற்பாடு" என்று தானாகக் கற்பனை செய்து ஒரு காரணத்தைச் சொல்லி அவர் களிடம் வரியைக் கொடுத்து அனுப்பினான்.

குடியானவர்களின் மகிழ்ச்சிக்குக் கேட்கவா வேண்டும். குதூகலத்துடன் கந்தனை வந்து மொய்த்துக்கொண்டார்கள். இந்தச் செய்தி நாடு முழுவதும் பரவவே, வீட்டில் பயந்து கொண்டு கவலையுடன் அடைந்துகிடந்த குடியானவர்களெல் லாம் மன்னரின் நல்ல குணத்தை வாயார வாழ்த்தியவாறு வரியை வாங்கிச் செலுத்தித் தங்கள் கணக்கை நேர் செய்து கொள்ள வந்தார்கள். மக்களின் மலர்ந்த முகத்தைக் கண்ட கந்தனுக்கும் மகிழ்ச்சி தாங்கவில்லை. வாரி வாரி வழங்கினான் அவர்களுக்கு. அவர்களும் சாரி சாரியாக உள்ளே போய் அரசரிடம் வரிப்பணத்தைச் செலுத்திவிட்டு, அவரை வாயார வாழ்த்தியபடி திரும்பினார்கள்.

அரசரோ அதிசயக்கடலில் ஆழ்ந்திருந்தார். அவருக்கு நினைவு தெரிந்து இப்படி எல்லாக் குடியானவரும் வரி செலுத்தியதே இல்லை. யாராவது பாக்கி இருக்கிறார்களா என்று கேட்டார் அரசர், தனாதிகாரியைப் பார்த்து. "யாருமே இல்லை. எல்லாம் வரவு வந்துவிட்டது" என்றார் தனாதிகாரி. பொக்கிஷம் நிறைந்தது. நாடு சுபிட்சமாக இருப்பதாக அரசர் சந்தோஷமடைந்தார். வெறும் சாக்குப் பையை உதறித் தோளில் போட்டுக்கொண்டு கந்தன் அரண்மனைக்குள் போனான்.

குடிமக்கள் கோலாகலமாகத் தங்கள் தங்கள் வீடுகளில் அரசரின் புகழ்பாடிக் குதூகலித்தார்கள். நகரத்தை அலங்கரித்தார்கள். கோயில்களில் மணி ஒலித்தது. மக்கள் கூடி வாத்தியங்களை முழங்கி மன்னரைப் புகழ்ந்து பாடினார்கள்.

கருங்கோட்டைக்கு நாடு கடத்தப்பட்ட மந்திரியும் சேனாதிபதியும் அங்கு போகவில்லை. போக மனமில்லை. நாட்டின் எல்லையிலே ஒளிந்துகொண்டிருந்தார்கள். திடீரென்று நகரத்திலே ஏற்பட்ட வாத்திய இசையும் குதூகலமும் அவர்களுக்கு வியப்பை அளித்தது. மக்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியின் காரணத்தை அறிய இருவரும் ஆவலோடு நகரத்துக்குள் பதுங்கிப் பதுங்கி வந்தார்கள்.




இத்தனை மகிழ்ச்சிக்கும் கொண்டாட்டத்துக்கும் காரணம் கந்தன்தான் என்று யாருக்கும் தெரியாது.

கந்தனும் ஆனந்தத்துடன் அரசரின் பூங்காவனத்தில் குதித்து விளையாடிக்கொண்டிருந்தான். இன்று ஊர்க் குடிமக்களெல்லாம் உல்லாசமாக இருப்பதற்குத் தன் நண்பன் மணிதான் காரணம் என்பதைக் கந்தன் மறந்துவிடவில்லை. அது கொண்டுவந்து கொடுத்த முத்துமாலையினால்தானே இவ்வளவும்? ஆகவே, மணிக்கு விருந்து வைக்க எண்ணினான். சமையலறைக்குப் போனான். விதவிதமான பட்சணங்களை எடுத்து ஒரு சிறிய மூட்டையாகக் கட்டிக்கொண்டான். கிளம்பிவிட்டான் மணியைச் சந்திக்க. காட்டையடுத்துள்ள பளிங்கு நீரோடை அருகில் அடிக்கடி மணி வரும் என்று அவனுக்குத் தெரியும். ஆகவே, அதன் கரையில் போய், ஒரு பாறைமீது உட்கார்ந்துகொண்டு தன் நண்பனை அழைத்தான் "மணி, மணி, மணி..." என்று.

தன் செய்கையை இரண்டு உருவங்கள் கவனித்துக் கொண்டிருப்பது தெரிந்திருந்தால் அப்படிக் கத்தி இருக்க மாட்டான். அவன் உட்கார்ந்திருந்த பாறைக்கு வெகு சமீபத்தில் ஒரு புதரில் சேனாதிபதி சிங்கமுகனும், மந்திரி ருத்திர

சிம்மரும் ஒளிந்துகொண்டிருந்தார்கள். அரசதண்டனை அவர்கள் இலட்சியம் செய்யவில்லை. கருங்கோட்டைக்கு போகாமல் நகரத்தின் எல்லையோரத்தில் ஒளிந்து மறைந்து வாழ்ந்து வந்தார்கள். திடீரென்று குடிமக்களிடம் எப்படி பொருள் வந்து வரி செலுத்தினார்கள் என்ற கேள்விக்கு அவர்களுக்கு விடை கிடைக்கவே இல்லை. தூரத்தில் கந்தன் வருவதைக் கண்டுதான் இருவரும் புதரில் பதுங்கிக்கொண்டார்கள்.

கந்தனின் அழைப்பிற்குச் சிறிது நேரத்தில் பலன் கிடைத்தது. மணி வெகு வேகமாக ஓடி வந்தது. கந்தன் தன் நண்பனை அணைத்துக்கொண்டான். தான் கொண்டுவந்திருந்த பலகார மூட்டையைப் பிரித்து அதன் முன்பு வைத்தான். மணி சிற்றுண்டியைச் சுவைத்துக்கொண்டே 'வாப் வாப்' என்று குரல் கொடுத்தது. தன் நண்பன் ஆசையோடு ஆர்வத்தோடு சாப்பிடுவதைக் கண்டு மகிழ்ந்து போனான் கந்தன்.

''மணி, நாளை இதே நேரம் இங்கு வருகிறாயா? உனக்கு உணவு வைத்திருக்கிறேன்,'' என்றான் கந்தன்.

மணியும் அவன் சொல்லியதைப் புரிந்துகொண்டது போல் தலையை ஆட்டிற்று.

சற்று நேரத்தில் இருவரும் பிரிந்தனர்.

கந்தன் மறைந்ததும் புதர் மறைவிலிருந்து மந்திரியும் சேனாதிபதியும் வெளிப்பட்டார்கள். அவர்கள் முகம் கோபத்தால் சிவந்திருந்தது.

''சிங்கமுகா, சரியான சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. இதை நழுவவிடக் கூடாது'' என்றார் மந்திரி. ''நாயைப் பின் தொடர்ந்து போனோம், முடியவில்லை. அதை நமக்குப் பணியும்படி செய்ய ஏற்பாடு செய்து பார்த்தோம், பயன் இல்லை. இந்தத் தடவை தோல்வியடையக் கூடாது. இந்தப் பாறையில் எது இருந்தாலும் அதைத் தன் நண்பன் கந்தனின் பரிசாக எண்ணி அது சாப்பிடும். ஆகவே, நாம் தூக்க

ருந்து கலந்த உணவை இங்கு வைக்கவேண்டும். நாய் அதைத் தின்று மயங்கிவிடும். அதை நாம் கட்டிப்போட்டு, அடித்து வதைத்து, அது காத்துவரும் புதையலிருக்குமிடத் திற்கு அழைத்துப்போகச் செய்ய வேண்டும்'' என்று தன் திட்டத்தை விளக்கினான்.

''அற்புதமான யோசனை! அபாரமான திட்டம்!'' என்று குதூகலித்தான் சிங்கமுகன். மறுநாள் இருவரும் தாங்கள் திட்டமிட்டபடி ஒரு மானைக் கொன்று, அதன் இறைச்சியைப் பக்குவம் செய்து, அதில் தூக்க மருந்தைக் கலந்து தயாராக வைத்துக்கொண்டிருந்தார்கள். கந்தன் வந்தான். தன் நண்ப னுக்காக ஆகாரத்தைக் குறிப்பிட்ட பாறைமீது வைத்து விட்டுக் காத்திராமல் அரண்மனைக்குத் திரும்பினான். அன்று அவனுக்கு அரண்மனையில் நிறைய வேலை.

கந்தனின் தலை மறைந்ததும் துரோகிகள் வெளியே வந் தார்கள். கந்தன் வைத்துவிட்டுப் போன உணவை எடுத்து விட்டு, அந்த இடத்தில் தாங்கள் தயாரித்திருந்த—மருந்து கலந்த உணவை வைத்துவிட்டு மறைந்துகொண்டார்கள். மணியின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்,

எதிர்பார்த்தது போலவே சொல்லி வைத்தாற்போல மணி புதர்களை விலக்கிக்கொண்டு, ஓடையில் குதித்து, இக்கரைக்கு வந்தது. சுற்றுமுற்றும் பார்த்தது. பாறையில் தயாராக ஆகாரம் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டு ஆவலோடு நாக்கில் ஜலம் சொட்ட ஓடி வந்தது. ஒளிந்திருந்தவர்களும் நடப் பதைத் தவிப்புடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

மணி சாதாரண நாயல்ல; மிகுந்த அறிவுள்ள நாய். நேற்று சாப்பிட்ட ஆகாரத்துக்கும் இன்று உள்ள ஆகாரத்துக் கும் வித்தியாசத்தை உணர்ந்தது. அது மட்டுமல்ல, இதில் கந்தனின் கைவாசனை இல்லை. அதன் மோப்ப குணம், அது மந்திரி ருத்திரசிம்மருடைய வேலைத்தனம் என்பதைச் சொல்லி விட்டது. 'இதில் ஏதோ சூழ்ச்சியிருக்கிறது' என்பதைத் தெரிந்துகொண்டது நாய். ஆனால் ஓட விரும்பவில்லை. உணவிலே ஏதோ கலக்கப்பட்டிருக்கிறது என்பதைப் புரிந்து

கொண்டது. ஒளிந்துகொண்டிருப்பவர்களுக்குப் பின் பக்கத்தைக் காட்டியபடி அது நின்றுகொண்டிருந்ததால் நாயின் செயல்களை அவர்களால் பார்க்க முடியவில்லை. மணி அந்த இறைச்சியை வாயால் கௌவியது, ஆனால் சாப்பிடவில்லை. அப்படியே ஓடையில் நழுவ விட்டது. ஆனால், சாப்பிடுவது போலப் பாவனை செய்து தலையை ஆட்டியது. பாறையைச் சுற்றிச் சுற்றி வந்தது. பாறைமீது உணவு இல்லாதிருப்பதைக் கண்ட கயவர்கள், நாய் தாங்கள் மருந்திட்ட உணவைச் சாப்பிட்டுவிட்டதாகக் குதூகலித்தார்கள்.

மணி மிகவும் சாமர்த்தியமான நாய். பேசமட்டும் செய்யாதே தவிர, மற்றனவெல்லாம் அதற்குத் தெரியும். தன்னை விரோதிகள் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை உணர்ந்துகொண்டது. ஆகவே, இங்கும் அங்கும் சிறிது நேரம் அலைந்துவிட்டு, மயங்கியது போலத் தரையில் விழுந்து படுத்துக்கொண்டது.

மணி தரையில் விழுந்ததும் தங்கள் மறைவிடத்திலிருந்து மந்திரியும் சேனாதிபதியும் வெளிப்பட்டார்கள். மந்திரி, நாயின் அருகில் வந்து, தன் காலால் உதைத்துப் பார்த்தார். நாயோ சரியாக நாடகமாடியது. "நன்றாக மயங்கிவிட்டது. இனி இதைத் தூக்கிக்கொண்டு மரகதக் கோட்டைக்குப் போக வேண்டியதுதான்," என்றான் சிங்கமுகன். அதன் கால்களைக் கட்டி, குச்சியில் மாட்டி, இருவரும் தூக்கிக்கொண்டு காட்டின் மறுகோடியிலுள்ள மரகதக் கோட்டை என்ற சிங்கமுகனின் அரண்மனைக்குப் போனார்கள்.

சிங்கமுகனின் அரண்மனையான மரகதக் கோட்டையில் மனிதர்களே கிடையாது. ஏறக்குறைய அது ஒரு பாழடைந்த கோட்டைமாதிரிதான். ஆனால் கட்டடங்கள் இடியவில்லை. மனிதர்கள்தாம் வசிக்கவில்லையே தவிர, மற்றபடி அது ஓர் அழகிய அரண்மனை. சிங்கமுகன் தன்னிடமுள்ள சாவியால் கோட்டைக் கதவைத் திறந்து, உள்ளே நுழைந்து, ஹாலில் உள்ள பந்தங்களை ஏற்றி வெளிச்சமுண்டாக்கினான். நாய் மணி ஒற்றைக் கண்ணைத் திறந்து பார்த்தது. அந்த ஹாலின்

சுவரில் பெரிய பெரிய படங்கள் மாட்டப்பட்டிருந்தன. எல்லாம் வீரர்களின் படங்களும், ராஜாக்களின் படங்களும். ஒரு படத்தைப் பார்த்த நாய், அது தன் நண்பன் கந்தனைப் போலவே இருப்பதைக் கண்டு திடுக்கிட்டது. அதே சாயல், முகம், மூக்கு, சிரிப்பு-எல்லாம் அப்படியே கந்தன்தான். கண்களை நன்றாகத் திறந்து உற்றுப் பார்த்தது மணி. சந்தேகமே இல்லை. கந்தனின் முகந்தான். ஆனால், கந்தன் வயதில் மூத்தவனாகிக் குதிரைமீது கம்பீரமாக வீற்றிருந்தான்.

அதே படத்தைச் சிங்கமுகனும் மந்திரிக்குச் சுட்டிக்காட்டிச் சொன்னான். "இதோ இந்தப் படத்திலுள்ள இவனால்தான் இன்று நான் இவ்வளவு கஷ்டப்படுகிறேன்."

"ஏன்? பத்து வருஷங்களுக்கு முன்பு நடந்த போரிலே இந்தக் கோட்டையின் அதிபதி ஜெயசிங்கபூபதியை நாம் நய வஞ்சகமாகச் சதிசெய்து கொன்றோமே, அவருடைய படம் தானே இது?" என்று கேட்டான் மந்திரி ருத்திரசிம்மன்.

"ஆமாம். ஆனால், நான் எதற்காக அவனைக் கொல்ல வேண்டுமென்று எண்ணினேனோ அது கைகூடவில்லை. யுத்தத்துக்குக் கிளம்புமுன் இந்த அயோக்கியன் தன் திரண்ட செல்வத்தை எல்லாம், தன் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு வீரனிடம் கொடுத்து, காட்டில் எங்கோ கொண்டு பதுக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டான். அந்த வீரனிடம் அதை மிக்க ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டுமென்றும் சத்தியம் வாங்கிக்கொண்டு கிளம்பி இருக்கிறான். நானும் எவ்வளவோ முயன்றேன்; அந்த வீரனையோ அவன் காக்கும் புதையலையோ கண்டுபிடிக்கவே முடியவில்லை" என்று அலுத்துக்கொண்டான் சிங்கமுகன்.

"கவலைப்படாதே, நண்பா! இந்த நாய் காக்கும் புதையலை நாம் அடைந்தால் இருவரும் பணக்காரர்களாகி விடுவோம். நீயும் இங்கு சுகமாக வாழலாம். நானும் என் மந்திரிவேலையை விட்டுவிட்டு இங்கு வந்துவிடுகிறேன். இருவரும் இன்று போல் என்றும் நண்பர்களாக வாழ்வோம்...ம் சரி, சரி—இந்த மிருகத்தை நம் இஷ்டப்படி பணியவைக்க

வேண்டும். சாட்டை எங்கே இருக்கிறது, எடு'' என்றார் மந்திரி, மேஜைமீது கிடத்தப்பட்டிருந்த நாயை வெறுப்போடு பார்த்துக்கொண்டே.

''இதோ, இந்த ஆயுத அறையில் வேண்டிய சாட்டை இருக்கிறது'' என்று அடுத்த அறைக்குள் போனான் சிங்கமுகன். ருத்திரசிம்மரும் அவனைத் தொடர்ந்தார். நாய் தூக்க மருந்திலே மயங்கிக் கிடப்பதாக இருவரும் நினைத்துக் கொண்டார்கள்.

இதற்குமேல் பாசாங்கு செய்து படுத்துக்கொண்டிருக்க மணிக்கு என்ன பைத்தியமா? அவ்விருவரும் ஹாலைவிட்டு மறைந்ததும் குப்பென்று எழுந்தது. சிங்கமுகன் குறிப்பிட்டுப் பேசிய படத்தை மற்றொரு முறை நன்றாகப் பார்த்துக்கொண்டது. அடுத்த விநாடி சாளரத்தின் வழியே பாய்ந்து ஓடியது. மணி தப்பிவிட்டது. இனி அதைத் தொடர்ந்து யாராலும் ஓடமுடியாது.

கையில் சாட்டையுடன் வந்த இருவரும் நாய் தப்பி ஓடுவதைப் பார்த்துவிட்டுத் திகைப்புடன் அப்படியே பிரமித்துப் போய் நின்றுவிட்டார்கள். ஏமாற்றத்தினால் அவர்கள் முகம் சுண்டிவிட்டது.

மணி ஓடியது. எங்கே தெரியுமா? தன் இருப்பிடமான குகையை நோக்கியல்ல, கந்தனைத் தேடிக்கொண்டே ஓடியது. மரகதக்கோட்டையிலே தான் கண்டவற்றையும் கேட்டவற்றையும் அவனிடம் புரிய வைப்பதற்காக. தான் நினைப்பது 'உண்மையாக இருக்குமோ-இருக்குமானால்...' என்று சிந்தித்தவாறே ஓடியது மணி. அதற்குப் பேசமட்டுந்தான் தெரியாதே தவிர, எல்லாம் தெரியும்.

அது வசிக்கும் குகையில்—காத்துவரும் புதையலின் அருகே ஒரு மனிதனின் எலும்புக்கூடு இருக்கிறது. ஒரு வீரனின் உடைகள் நாற்காலியில் மாட்டி வைக்கப்பட்டிருக்கின்றன. அந்த எலும்புக்கூடும் உடையும் மணியின் அருமை எஜமான

னுடையவை. 'சிங்கமுகன் குறிப்பிட்ட ஜெயசிங்க பூபதியின் உண்மை ஊழியனும் வீரனுமான அந்த மனிதன்தான் ஒரு வேளை தன்னுடைய எஜமானனோ? அப்படியானால் ....கந்தன் யார்?''—என்று யோசித்தவாறே கந்தனைக் காண விரைந்தோடியது மணி.




சதிகாரர்களின் பிடியிலிருந்து விடுபட்ட மணி எங்கும் நிற்காமல் ஓடி வந்தது. தன்னை அவர்கள் பின்தொடர்ந்து வருவார்கள் என்று அதற்குத் தெரியும். ஆகவே, காட்டிற்குள் புகுந்தது. காட்டில் அதை யாராலும் பிடிக்க முடியாது. தவிர, இருட்டிவிட்டதால் இனி அரண்மனைக்குச் சென்று கந்தனைச் சந்திக்க நள்ளிரவாகிவிடும். அந்த நேரத்தில் அரண்மனைக்குள் புகுந்து குழப்பமுண்டாக்க அது விரும்பவில்லை. ஆகவே, இரவைக் கானகத்தில் கழித்துவிட்டுக் காலையில் கந்தனைச் சந்திப்பதென்று முடிவு செய்தது மணி.

மறுநாள் பகல்... அரண்மனையிலே அரசர் சுமந்திரர் விருந்தினர்களோடு உணவருந்த உட்கார்ந்திருந்தார். கந்தன் அரசரின் அருகில் நின்றுகொண்டிருந்தான். அரசருக்கு ஏதாவது தேவையானால் அவர் உத்தரவை ஏற்று, அதை நிறைவேற்றத் தயாராகக் காத்திருப்பான் கந்தன். இப்போதெல்லாம் அரண்மனையில் விருந்துகள் விசேஷமாகவே இருந்தன. கந்தன் வந்தபிறகு கஜானா நிரம்பி இருந்தது. ஆகவே, அரசரும் உற்சாகமாக, விருந்துகளைத் தடபுடலாக நடத்தலானார்.

அரசருக்கு அன்று நல்ல பசி. ஆவலோடு உண்பதற்குக் குனிந்தார். அறைக்கு வெளியே ஏதோ சப்தம் உண்டாயிற்று. அவர் கவனம் அதில் சென்றது. ஒரு சேவகன் ஓடோடி வந்தான். மூச்சு வாங்க, "அரசே, ஒரு பெரிய நாய் உள்ளே வர முயலுகிறது. தடுத்தும் பயனில்லை. எங்களைக் கடிக்க வருகிறது" என்றான். "இதற்காகவா இப்படி மூச்சு வாங்க ஓடி வந்தாய்? போடா மடையா! ஒரு நாயை விரட்ட முடியாத நீங்களா நாட்டை விரோதிகளிடமிருந்து காப்பாற்றப் போகிறீர்கள்?" என்று அவன் செய்தியில் அக்கறை கொள்ளாமல் உண்ண ஆரம்பித்தார். அதே சமயம் கம்பீரமான நாய் ஒன்று புலியைப் போலப் பாய்ந்து உள்ளே—அரசர் சாப்பிட உட்கார்ந்திருக்கும் அறைக்குள்ளே — வந்துவிட்டது. அதைத் தடுக்க முயன்று அதன் பின்னாலேயே ஓடிவந்த இரண்டு வீரர்கள், அது தங்கள் பிடிக்கு அகப்படாமல் அரசரின் அருகில் போய்விடவே, செய்வதறியாது திகைத்து வாசற்படி அருகிலேயே நின்றுவிட்டார்கள்.

ஓடி வந்தது அதிசய நாய் மணியேதான். நேரே கந்தனின் அருகில் வந்தது. அவன் கையைக் கௌவிப் பற்றி இழுத்தது. கந்தனுக்குத் தர்மசங்கடமாக இருந்தது. "மணி, மணி... வெளியே போய்விடு. இங்கே ஏன் வந்தாய், மணி? இங்கெல்லாம் இப்படி வரக்கூடாது, போ" என்று மெதுவாக, ஆனால் கண்டிப்பாகச் சொன்னான் கந்தன். ஆனால் மணி கந்தனின் தவிப்பைப் பொருட்படுத்தவில்லை. அவன் சொன்னதையும் கேட்கவில்லை. தன்னோடு வரும்படி கையைப் பற்றி இழுத்தது.

சாப்பிடும் அறைக்குள் நாய் வந்தது, அரசருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. "கந்தா! இதென்ன நாடகம்? உன் நாயா இது? இதை முன்பு ஒரு தடவை பார்த்ததாக நினைவு வருகிறது. உன் நாயைக் கட்டிப்போடாமல் இப்படித்தான் அரண்மனைக்குள் திரியவிடுவதா?" என்றார் கடுமையான குரலில்.

கந்தனுக்குப் பேசவே நாக்குப் புரளவில்லை. "அரசே, இது, இது இந்த நாய்தான்... அந்த விலையுயர்ந்த பொருள்

களை எல்லாம் கொண்டுவந்து கொடுக்கும் அதிசய நாய். இது இன்று இங்கு இப்படித் திடீரென்று வந்ததன் காரணம் புரியவில்லை. இம்மாதிரி மரியாதை தெரியாமல் அது நடந்து கொண்டதே இல்லை'' என்று தடுமாற்றத்துடன் பேசினான் கந்தன். அரசர், நாயை நன்றாக உற்றுப் பார்த்தார். அவர் பசியை மறந்தார். மோதிரமும், வைர மாலையும், முத்துமாலை களுந்தாம் அவர் கண்முன்பு நர்த்தனமாடின.

''புதையலைக் காத்து வரும் நாய் இதுதானா? ம், வேறு நாயாக இருந்தால் இதைக் கொல்ல உத்தரவிட்டிருப்பேன். கந்தா, இது உன்னை எங்கேயோ வா என்று அழைக்க அல்லவா செய்கிறது. ஒரு வேளை தான் காத்துவரும் புதையல் இருக்கு மிடத்திற்குக் கூப்பிடுகிறதோ என்னவோ...இந்த நாட்டில் கிடைக்கும் புதையலில் பாதி அரசரைச் சேர்ந்தது, தெரியுமா? கந்தா...போ—இதன் விருப்பப்படி இதனுடன் போய் வா'' என்றார்.

கந்தனும் பரபரப்புடன் ''போய் வருகிறேன், அரசே'' என்று வணங்கிவிட்டுக் கிளம்பத் தயாரானான். மணி முன் னால் ஓடியது, வழி காட்டிக்கொண்டு. ''மணி...இது என்ன, இன்றைக்குப் புதிதாக இருக்கிறது? என்னை எங்கே கூப்பிடு கிறாய்? உன்னைப் பின்தொடர்ந்து வரச் சொல்கிறாயா?'' என்று கேட்டான் கந்தன். ''வாப்...வாப்'' என்று குரல் கொடுத்தது மணி. ஆனால் நிற்கவில்லை. திரும்பித் திரும்பி நின்று, கந்தன் அருகில் வந்ததும் மேலே மேலே தொடர்ந்து ஓடியது மணி. காட்டிலே புகுந்து, புதர்களை விலக்கிக் கொண்டு, மரங்களில் நுழைந்து நுழைந்து கந்தனைக் கூட்டிக் கொண்டு, முன்னால் ஓடிக்கொண்டிருந்த மணி சட்டென்று நின்றது. எதையோ உற்றுக் கேட்டது; தன் காதுகளை விறைப்பாக்கிக்கொண்டு, காற்றை முகர்ந்தது. சட்டென்று ஒரு புதருக்குள் புகுந்து ஒளிந்துகொண்டது. கந்தனும் அதை அணைத்துக்கொண்டு அதனருகில் ஒண்டிக்கொண்டான்.

யாரோ இருவர் பேசிக்கொண்டு வந்தார்கள்... ''உன் முட்டாள்தனத்தினால்தான் அது தப்பிவிட்டது. நம்முன் யாரா

வது ஒருவன் அதன் அருகிலேயே இருந்திருக்க வேண்டும். போகட்டும், அது எப்படியும் அரண்மனைப் பக்கம் வந்தே தீரும். இந்தத் தடவை அதைத் தப்பவிடக்கூடாது...'' இதைச் சொல்லிக்கொண்டு வந்தவர் மந்திரி ருத்திரசிம்மர்; கேட்டுக்கொண்டு வந்தவர் சிங்கமுகன். இருவரின் கையி லும் சவுக்கு இருந்தது. இருவரின் முகங்களும் ஆத்திரத்தினால் சிவந்திருந்தன. கந்தனும் மணியும் பதுங்கி இருந்த புதரைத் தாண்டி இருவரும் அரண்மனையின் பக்கமாக நடந்து மறைந் தார்கள்.

''இதெல்லாம் என்ன, மணி? அவர்கள் உன்னைப்பற்றித் தான் பேசிக்கொண்டு போகிறார்களா? அப்படியானால் அவர் கள் உன்னைக் கட்டி இழுத்துப் போனார்களா? நீ அவர்களிட மிருந்து தப்பி வந்துவிட்டாயா?'' என்று கேட்டான் கந்தன். அவனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

மணி எதுவும் பதில் சொல்லாமல் வேகமாக முன்னால் ஓடிப்போய் நின்று கந்தனைப் பார்த்துத் தலையை அசைத்தது. சீக்கிரமாகத் தொடர்ந்து வா என்பது போல. கந்தனும் தன் நண்பனைத் தொடர்ந்து போனான்.

சிறிது நேரத்தில் கந்தனை மணி மரகதக் கோட்டைக்கு அழைத்து வந்தது. அது சேனாதிபதி சிங்கமுகனின் அரண் மனை என்று கந்தனுக்குத் தெரியும். ''இங்கு எதற்குக் கூட்டி வந்தாய், மணி?...'' என்றான் கந்தன். கோட்டையின் முன் வாசல் கதவு திறந்திருந்தது. அவர்களைத் தடுக்க அங்கு யாருமே இல்லை. மணி சுலபமாகக் கந்தனை அரண்மனையின் நடு ஹாலுக்கு அழைத்துப் போய்விட்டது. கந்தனுக்கு மணி யின் செயல் முழுவதும் மர்மமாக இருந்தது. திக்திக்கென்று அடித்துக்கொள்ளும் உள்ளத்துடன் மெள்ள மெள்ளப் பூனை போலப் பதுங்கிப் பதுங்கி அதைப் பின்தொடர்ந்தான்—கல வரத்துடன் இங்குமங்கும் பார்த்துக்கொண்டே.

கொஞ்சமும் பயமோ, தடுமாற்றமோ இன்றிக் கம்பீரமாகச் சென்ற மணி, சுவரில் மாட்டப்பட்டிருந்த ஒரு படத்தின் முன்னால் போய்த் தன் முன்னங்கால்களைச் சுவரில் வைத்து

எவ்வி நின்று, அதைப் பார்த்துக் குரைத்தது. பிறகு, கந்தனின் அருகில் வந்து அவனையும் அதன் அருகில் கொண்டுபோய் நிறுத்திப் பார்க்கும்படி 'வாப், வாப்' என்று சப்தமிட்டது.

கந்தன் அந்தப் படத்தை உற்றுப் பார்த்தான். மிக அழகான படம். ஒரு வீரன் குதிரைமீது கம்பீரமாக உட்கார்ந்திருப்பது போன்று வரையப்பட்டிருந்தது. அது படம் என்று சொல்ல முடியாதபடி அத்தனை தத்ரூபமாக இருந்தது. அந்த வீரனின் கண்களில்தாம் எவ்வளவு கம்பீரம்! கந்தனின் உள்ளத்தை ஏதோ செய்தது. எப்போதோ எங்கேயோ அந்த உருவத்தைப் பார்த்திருப்பது போன்று ஓர் எண்ணம். அந்தக் கண்கள், அந்த முகம் கந்தனுக்கு எதையோ, யாரையோ நினைவுபடுத்தியது. இந்த மனிதனை எங்கே எப்போது பார்த்தோம் என்று நினைவைக் குழப்பிக்கொண்டான். பலன் இல்லை. கந்தனின் குழப்பத்தை — தவிப்பை — மணி கவனித்தது. அவன் உடையைக் கௌவி இழுத்துக்கொண்டு போய் ஒரு நிலைக்கண்ணாடி முன் நிறுத்தியது. கந்தனுக்கு முதலில் அதன் செய்கை விளங்கவில்லை. கண்ணாடி முன் னிருந்து நகரப் பார்த்தான். ஆனால் மணி விடவில்லை. "இங்கே நான் என்ன செய்ய வேண்டும், மணி? இங்கு நான் எதைப் பார்ப்பது? கண்ணாடியில் என் உருவந்தானே தெரிகிறது?" என்றான் கந்தன். சட்டென்று அவனுக்கு ஏதோ தோன்றியது. தன்னை—தன் உருவத்தை—தன் முகத்தைக் கண்ணாடியில் நன்றாகப் பார்த்துக்கொண்டான். அந்த நினைவோடு எதிரில் இருந்த படத்திலுள்ள வீரனின் முகத்தையும் பார்த்தான். இப்போது அவனுக்கு நினைவு வந்துவிட்டது. அந்தப் படத்திலுள்ள வீரனின் முகத்தைப் போன்ற முகத்தை எங்கே பார்த்தோமென்று. அது அவனுடைய சொந்த முகமேதான்.

"அப்படியானால்....?" அவன் உள்ளம் வேகமாக அடித்துக்கொண்டது. படத்தின் அருகே போய் நன்றாகக் கவனித்துப் பார்த்தான்.

"மணி...இது என்னுடைய அண்ணாவின் படமா?" என்று கேட்டான் தவிப்போடு. மணி, 'இல்லை' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தது.

"அப்படியானால் — இது — இது...என் தகப்பனாரா, மணி?" என்று கேட்கும்போது அவன் குரல் கம்மிவிட்டது. இதயத்துடிப்பும் அதிகமாயிற்று. 'வாப், வாப், வாப்" என்று குரைத்துக்கொண்டு கந்தனைச் சுற்றிச் சுற்றி வந்து குதித்தது மணி. கந்தனுக்கு அப்படியே மூச்சு நின்றுவிடும் போலிருந்தது. சில நிமிஷங்கள் அப்படியே பிரமித்துப்போய்ச் சிலையாக நின்றுவிட்டான்.

இந்த அரண்மனையில் அவன் வாழ்ந்திருக்கிறான். இங்கு வாழ வேண்டியவன் அவன். சங்கிலியின் குடிசையிலே கஞ்சிக்குக் கஷ்டப்பட்டு உதை வாங்கி வளர்ந்ததற்கும், இந்த அரண்மனையிலே வளர்ந்ததற்கும் இடையிலே ஏதோ நடந்திருக்கிறது. அவன் தகப்பனார் இறந்திருக்கவேண்டும் அல்லது கொல்லப்பட்டிருக்கவேண்டும். சேனாதிபதி சிங்கமுகனுக்கு இந்த அரண்மனை எப்படி உரிமையாயிற்று?

கந்தனுக்கு எல்லாம் ஒரே மர்மமாக இருந்தது. "மணி! மணி! அப்படியானால் இது—இந்த மாகதக்கோட்டை என் கோட்டை. இது என் சொத்து—கோட்டை என் கோட்டை!" என்று குதூகலத்துடன் கத்தினான், கந்தன் தன் நண்பனின் கழுத்தைக் கட்டிக்கொண்டு.

அதே சமயம் வெளியே படிகளில் மனிதர் ஏறிவரும் பாத ஒலியும் பேச்சுக் குரலும் கேட்டன. கந்தன் தன் நண்பன் மணியுடன் சட்டென்று இருள் சூழ்ந்த ஒரு மூலையில் போய்ப் பதுங்கிக்கொண்டான்.

வந்தது மந்திரியும் சேனாதிபதியுந்தாம். "அதிர்ஷ்டம் நம் பக்கத்தில் இல்லை, மந்திரியாரே. அரண்மனைச் சிப்பந்திகள் பேசிக்கொள்வதை என் காதால் கேட்டேன். அரசரின் சாப்பாட்டு அறைக்குள் நுழைந்து கந்தனை இழுத்துக்கொண்டு எங்கோ போயிற்றாம் அந்த அதிசய நாய்.

வேறு எங்கே கூட்டிப் போயிருக்கப் போகிறது! தான் காத்து வரும் புதையலைக் காட்டத்தான் அழைத்துப் போயி ருக்கும்...ம்...இனி நாம் அந்தப் புதையல் ஆசையை மறந்து விட வேண்டியதுதான்'' என்று அலுப்புடன் ஆசனத்தில் பொத் தென்று விழுந்தான் சேனாதிபதி சிங்கமுகன்.

கூண்டிலடைக்கப்பட்ட புலியைப் போல அங்கும் இங்கும் உலாவிக்கொண்டிருந்த மந்திரி, தன் வலக்கரத்தை முஷ்டி யாக்கிக்கொண்டு இடக்கரத்தில் உள்ளங்கையில் குத்தியபடி "புதையலை எப்படியும் அடைந்தே தீருவேன், சிங்கமுகா! எப்படியும் அவர்கள் நகரத்துக்குத் திரும்பியே ஆகவேண்டும். கானகத்தின் எல்லையிலே காத்திருப்பேன். அந்த இரண்டு பூச்சிகளையும் பிடித்து நசுக்கி'' என்று பல்லை நறநறவென்று கடித்தார் மந்திரி.

''இவ்வளவு பெரிய அரண்மனையை வைத்துக்கொண்டு என்ன செய்வது? பொருளில்லாவிட்டால் என்ன பயன்? இந்தக் கோட்டையின் தலைவன ஜெயசிங்க பூபதியை வஞ்சகமாகக் கொன்று, அவன் ஒரே வாரிசான இரண்டு வயதுக் குழந்தை யையும் கடத்தினேனே எதற்காக? இந்தக் காலிஅரண்மனையை அடையவா? இல்லவே இல்லை — ஜெயசிங்க பூபதியிடம் உள்ள திரண்ட ஆஸ்தியை அபகரிக்கவே இத்தனையும் செய் தேன். ஆனால், அவன் என் திட்டத்தை நிர்மூலமாக்கித் தன் பொக்கிஷத்திலிருந்த புதையலை எல்லாம் விசுவாசமுள்ள வேலைக்காரனைவிட்டு அப்புறப்படுத்தி எங்கோ பதுக்கிவிட் டான் பரதேசிப்பயல்'' என்று ஆத்திரத்தில் குமுறினான் சிங்க முகன்.

மறைவிடத்திலே கந்தனின் உள்ளமும் குமுறியது. "என் தகப்பனார்தான் இந்தக் கோட்டைத் தலைவர் ஜெயசிங்க பூபதி. இந்த அயோக்கியன் சிங்கமுகன்தான் என் தந்தையைக் கொன்று என்னையும் சங்கிலியிடம் ஒப்படைத்து இருக்கிறான்.'' தான் பட்ட துன்பத்துக்கெல்லாம் காரணம் இந்தச் சிங்கமுகன் தான் என்பதை அறிந்தபோது கந்தனுக்கு ஆத்திரம் குமுறிக் கொண்டுவந்தது. கந்தனின் உடலில் எங்கிருந்தோ அசுரபலம்

வந்து புகுந்துகொண்டது. இத்தனை வருஷங்களாக உரிமையை இழந்து ஊரூராகச் சுற்றிக்கொண்டிருந்த தனக்கு மணி உண்மையைக் காட்டியதை எண்ணியபோது அதனிடம் அன்பும் பாசமும் அதிகமாயிற்று. இனி நிமிஷமும் தாமதியாமல் அரசரிடம் விஷயத்தைச் சொல்லி, தனக்குள்ள உரிமையைப் பெறவேண்டும் என்று உறுதி செய்துகொண்டான்.

"சிங்கமுகா! களைப்பாக இருக்கிறதே. தாகத்திற்கு இங்கு ஒன்றுமில்லையா ?" என்று கேட்டார் மந்திரி ருத்திரசிம்மர்.

"வேண்டிய திராக்ஷரசம் இருக்கிறது, வாருங்கள்" என்று எதிரிலுள்ள ஓர் அறைக்கு அழைத்துப்போனான் சிங்கமுகன். குபீரென்று பாய்ந்து ஓடியது மணி. அவர்கள் உள்ளே புகுந்த அறையின் கதவைத் தன் முன்னங்கால்களால் படீரென்று அடித்துச்சாத்தியது. கதவைச் சாத்திய ஒலியிலே கோட்டையே கிடுகிடுத்தது. மணி கதவைச் சாத்தியதோடு திருப்தியடையவில்லை. அதன் தாழ்ப்பாளையும் தன் பல்லினால் இழுத்துப் போட்டு அவர்களை அறைக்குள்ளேயே சிறைப்படுத்தியது. கந்தனும் தன் நண்பனுக்கு உதவி செய்தான். அவர்களிருந்த அறைக்கதவின் மேல்கொக்கியையும் போட்டான். துரோகிகள் சிறைப்பட்டுவிட்டார்கள்.

"யாரது?—திருட்டுப் பயல்களா!—கதவைத் திறவுங்கள்!' என்று உள்ளே சிக்கிக்கொண்ட இருவரும் படபடவென்று கதவைத் தட்டிக் கர்ஜித்தார்கள். கந்தன் பதிலே பேசவில்லை. மணி மறுபடியும் அவன் உடையைப்பற்றி எங்கோ வரும்படி அழைத்தது. கந்தனுக்குக் காட்டவேண்டியது இன்னும் ஏதோ பாக்கி இருந்தது. அதன் கடமை இன்னும் முடியவில்லை போலும்!

வியப்போடும் தவிப்போடும் கந்தன், தன் நண்பன் மணியைப் பின்தொடர்ந்து சென்றான். அதிசய நாய் அவனை இப்போது எங்கே அழைத்துப் போகிறதோ ?



# புதையலின் அதிபதி

மரகதக் கோட்டை மன்னன் ஜெயசிங்க பூபதியின் செல்வக் குமரன்தான் கந்தன் என்பதைக் கண்டுபிடித்தது மணி. அதைக் கந்தனுக்கும் தெரிவித்துவிட்டு, கந்தனுக்கு உரிமையான புதையலை அபகரிக்கத் திட்டமிட்டுச் சதி செய்த மந்திரியையும் சேனாதிபதியையும் ஓர் அறையில் சிறைப்படுத்தியது. மணி, கந்தனை இன்னும் எங்கோ அழைத்துச்சென்றது. மாலை மறைந்து மெல்ல மெல்ல இருள் கவிந்துகொண்டு வந்தது. கந்தனை மணி வெகு வேகமாகக் கானகத்தின் நடுவே அழைத்துக்கொண்டு போயிற்று. அந்த வேளையில் அந்தக் காட்டிற்குள் போக யாரும் பயப்படுவார்கள். ஆனால் கந்தன் கலங்கவே இல்லை ; தன் நண்பன் மணி தன்னைக் காப்பாற்றும் என்ற துணிவு அவனுக்கு.

வெகுநேரம் வெகுதூரம் பிரயாணம் செய்த பிறகு ஒரு மலையடிவாரத்திற்கு வந்தார்கள். மணி அங்கே தரையில் உட்கார்ந்து வானத்தை அண்ணாந்து பார்த்தது. சந்திரன் கிளம்ப இன்னும் சிறிது நேரமிருந்தது. வெளிச்சத்துக்காகவே அது காத்திருந்தது. அந்த மலைமீது ஏற வேண்டும். மணி மட்டுமானால் வெளிச்சம் தேவையில்லை, ஏறிவிடும். இப்போது

கந்தனையும் கூட்டிக்கொண்டு வந்திருப்பதால்தான் நிலா வெளிச்சத்தை எதிர்பார்த்தது. மணி எதிர்பார்த்த நிலாவும் மெள்ள மரங்களின் உச்சியில் எட்டிப்பார்க்க ஆரம்பித்தது. இன்னும் சிறிது நேரத்தில் அந்தப் பிராந்தியம் முழுதும் நிலவொளி பரவிவிடும்.

மலைமீது தாவி ஏறியது மணி. கந்தனையும் தன்னைப் பின் தொடர்ந்து வரும்படி சொல்லியது. கந்தனுக்கு எப்படி அந்த மலைமீது ஏறவேண்டும், கைகளால் எங்கே பிடித்துக்கொள்ள வேண்டும், கால்களை எந்த இடத்தில் ஊன்றி எப்படி ஏற வேண்டும், எங்கே அபாயமான இடங்கள் என்றெல்லாம் காண்பித்துக்கொண்டே அழைத்துப் போயிற்று. இந்தக் கரடுமுரடான பாறைகளின்மீது பகலில் ஏறுவதே கடினம். இரவில், நிலவொளியில் ஏறுவதென்றால் மிகுந்த அபாயம். ஆனால், மணியின் சாமர்த்தியத்தினால், அதன் உதவியினால் கொஞ்சங்கூட ஆபத்தின்றி அந்த மலைமீது ஏறிவிட்டான் கந்தன்.

மணி ஒரு கணவாய் வழியே ஓடியது. புதர் மண்டிக்கிடந்த ஓர் இடத்தில் வந்து நின்றது. சுற்று முற்றும் பார்த்தது. யாருமில்லை என்பதை நிச்சயப்படுத்திக்கொண்டதும் புதருக்குள் புகுந்து சென்றது. கந்தனும் அதைப் பின்பற்றினான். புதரின் மறுபுறத்திலே ஒரு குகை.

"மணி, இந்தக் குகைக்குள் நாம் போகவேண்டுமா?" என்று கேட்டான் கந்தன்; "ஒரே இருட்டாக இருக்கிறதே! வழி எப்படித் தெரியும்?" கந்தனின் கேள்வியைப் புரிந்துகொண்டது போல மணி, அந்த இருண்ட குகைக்குள் எங்கோ ஓடிச்சென்று ஒரு மெழுகுவத்தியைக் கொண்டுவந்தது. இரண்டு சக்கிமுக்கிக் கற்களையும் கொண்டுவந்தது. மணியின் அறிவைக் கந்தன் வியந்து பாராட்டினான். கற்களைத் தட்டிப் பொறி உண்டாக்கி மெழுகுவத்தியைக் கொளுத்தினான். குகை எங்கும் ஒளி பரவியது.

உள்ளே வரும்படி அழைத்தது, மணி. கந்தன் தன் நண்பனான நாயின் பின்னால் உள்ளே சென்றான். ஆரம்பத்

தில் குறுகலாக இருந்த குகை, வரவர விசாலமாகிக்கொண்டு வந்தது. ஓர் இடத்தில் கந்தன் அப்படியே பீதியினால் கூச்சலிடவும் முடியாமல் ஸ்தம்பித்து நின்றுவிட்டான். அவன் உடல் பயத்தினால் நடுங்கிக்கொண்டிருந்தது. அப்படி அவனைப் பீதிகொள்ளச் செய்தது என்ன தெரியுமா? ஒரு மனிதனின் எலும்புக்கூடு. தரையில் கிடந்தது. அந்த மனித எலும்புக்கூட்டின் அருகே ஒரு கத்தியும் கிடந்தது. கந்தன் திரும்பி ஓட முயன்றான். ஆனால் மணியின் செய்கை அவனை வியப்பிலாழ்த்தியது. அந்த எலும்புக்கூட்டின் அருகே சென்றதும் அது தலையைத் தொங்கவிட்டபடி சோகமுடன் உட்கார்ந்தது. அதன் கண்களில் நீர் வழிய ஆரம்பித்தது. அந்த எலும்புக்கூட்டின் முகத்தையும் கைகளையும் அது வாஞ்சையோடு முத்தமிட்டது.

கந்தனுக்கு அதன் செய்கை விசித்திரமாக இருந்தது. சற்று பயம் நீங்கியவனாக விளக்கைத் தூக்கிப் பிடித்தான் அங்கே அவன் கண்ட காட்சியினால் அப்படியே கூச்சலிட்டு விட்டான். பொன்னும் பொருளும் மணியும் கொட்டிக் குவிக்கப் பட்டிருந்தன அங்கே. பவுன் காசுகள் பெட்டி பெட்டியாக வைக்கப்பட்டிருந்தன. தரையெல்லாம் காசுகள் சிதறிக் கிடந்தன. நகைகள், ஆபரணங்கள், விலையுயர்ந்த விதவித மான பொருள்கள் எல்லாம் அங்குக் காணப்பட்டன. வைரம், வைடூரியம், மாணிக்கம், மரகதம், நீலம், பவழம், முத்துகள்— இவைகளால் ஆன நகைகள், பட்டாக்கத்திகள், கீரிடங்கள், ஒரு பெரிய அரசாங்கத்தின் பொக்கிஷமே அங்கு நிரம்பி இருந்தது. கந்தன் இப்போது அந்த எலும்புக்கூட்டைப் பயமின்றிப் பார்த்தான். அருவருப்புப் போய் அன்பும் பக்தியும் கொண்டான் அதனிடம். மரகதக் கோட்டையில் பார்த்தவை களையும் கேட்டவைகளையும் இங்குக் கண்ட காட்சியையும் ஒன்றுசேர்த்துப் பார்த்தபோது அவனுக்கு உண்மை விளங்கி விட்டது.

ஜெயசிங்க பூபதியும் மரகதக் கோட்டைக்கு அதிபதியு மான தன்னுடைய தகப்பனாரின் சொத்துகள்தாம் இவை. அவர் ஏதோ ஒரு யுத்தத்துக்குப் போகும் நிலை ஏற்பட்டிருக்

கிறது. தன் திரண்ட செல்வத்தை அபகரித்துக்கொள்ளச் சிலர் திட்டமிடுகிறார்கள் என்பதை அறிந்த அவர், தாம் யுத்தத்துக்குப் போகுமுன் யாருக்கும் தெரியாமல் தம்மிடம் விஸ்வாசமுள்ள உண்மை ஊழியனான ஒரு வீரன் மூலம் தம் சொத்துகளை எல்லாம் இந்தக் குகைக்கு அப்புறப்படுத்திக் காப்பாற்றும்படி சொல்லிவிட்டு யுத்தத்துக்குப் போயிருக்கிறார். யுத்த களத்திலே சிங்கமுகன் வஞ்சகமாக அவரைக் கொன்று விட்டு மரதக் கோட்டைக்கு வந்து, ஜெயசிங்க பூபதியின் ஒரே வாரிசும் செல்வக் குமாரனுமான குழந்தையையும் கொன்று விடும்படி யாரிடமோ கொடுத்து அனுப்பி இருக்கிறான். ஆனால், அவன், குழந்தையைக் கொல்ல மனமில்லாமல் சங்கிலியிடம் ஒப்படைத்து விட்டுப் போயிருக்கிறான்.

இவ்வளவு கொடுமைகளையும் சிங்கமுகன் செய்தது, ஜெயசிங்க பூபதியின் திரண்ட ஆஸ்தியை அபகரித்துக் கொள்ளத்தான். ஆனால் அரண்மனை எங்கும் தேடினான் ... அகப்படவில்லை. ஏமாந்தான்.

இந்தக் குகையில் உள்ள எலும்புக்கூடு ஜெயசிங்க பூபதியின் உண்மை ஊழியனான புதையல் காத்த வீரனுடையது. இந்த வீரனின் நாய்தான் மணி. தன் தலைவன் ஜெயசிங்க பூபதி சண்டையில் இறந்துவிட்டதையும், குழந்தையைச் சிங்கமுகன் கொன்றுவிட்ட செய்தியையும் அறிந்தான், அந்த வீரன். குகையிலே புதையலின் காவலாளியாக இருந்த அவன் தன் எஜமானனின் ஆஸ்தி, எதிரியின் கையில் சிக்கிவிடாதபடி காத்து வந்தான். சிங்கமுகன் எவ்வளவோ முயன்றும் புதையல் உள்ள குகையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. வருஷங்கள் உருண்டன. வீரன் இறந்துவிட்டான்; இறக்கும் போது தன் நாயான மணியிடம் தன் கடமையைத் தொடர்ந்து செய்யும்படி சொல்லிவிட்டுப் போனான். தன் எஜமானன் இறந்தபிறகு குகையையும் புதையலையும் காப்பாற்றும் காரியத்தை மணி, கருத்துடன் கவனித்து வந்தது.

இத்தனை விஷயத்தையும் ஊகித்துத் தெரிந்துகொண்ட கந்தன், அந்த உண்மை ஊழியனான வீரனின் எலும்புக்

கூட்டுக்கு வீர வணக்கம் செலுத்தினான். நாக்கைத் தொங்க விட்டபடி தன்னையே பார்த்துக்கொண்டிருந்த மணியின் கழுத்தைக் கட்டிக்கொண்டு கண்ணீர் விட்டான். பிறகு, "மணி, நீ எனக்குச் செய்துள்ள இந்த உபகாரத்திற்கு நான் உனக்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்! நேரமாகிறது வா, அரண்மனைக்குப் போவோம். எல்லா விஷயங்களையும் அரசரிடம் சொல்லி, அவர் உதவியை நாட வேண்டும்" என்றான். தன் தோழனின் வார்த்தைகளைப் புரிந்துகொண்டதுபோல மணியும் குகையை விட்டுக் கிளம்பத் தயாராயிற்று.

குகையை அடைவதற்குத்தான் கஷ்டமாக இருந்தது. மலையிலிருந்து சுலபமாக இறங்கிவிட்டார்கள். நிலவும் உச்சிக்கு வந்துவிட்டதால் நல்ல வெளிச்சமாக இருந்தது. கந்தன் அரண்மனையை அடைந்தபோது எல்லோரும் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தார்கள். கந்தன் அரசரின் அறைக்கதவைத் தட்டி அவரை எழுப்பினான். நல்ல தூக்கத்தில் எழுப்பினால் சுமந்திரருக்குக் கோபம் வரும். கொட்டாவி விட்டுக்கொண்டே எழுந்து வந்து கதவைத் திறந்த அவர், தம்மை எழுப்பியது பொடிப்பயல் கந்தன் என்று அறிந்து ஆத்திரமடைந்தார். ஆனால், கந்தன் தான் புதையல் இருக்குமிடத்தை அறிந்து வந்திருப்பதாகத் தெரிவிக்கவே, அரசரின் கோபமெல்லாம் பறந்துவிட்டது. தூக்கக் கலகத்திலிருந்து விடுபட்டார். அவசர அவசரமாக நல்ல உடையணிந்து நிலா மண்டபத்துக்கு வந்தார்.

கந்தன் தன் கதை முழுவதையும், தான் மரகதக்கோட்டை அரசரின் மகன் என்பதையும், அன்று பகலிலிருந்து அதுவரை தான்—கண்ட கேட்ட விஷயங்களை எல்லாம் கோவையாக்கிச் சொன்னான். கந்தனின் கதையைக் கேட்கக் கேட்க அரசரின் கண்களில் நீர் வழிந்தது.

"ஆகா! என் நண்பரான ஜெயசிங்கரின் மகனா நீ!... கடம்ப நாட்டானோடு போரிட நான் போனபோது ஜெயசிங்கர் எனக்கு உதவியாகத் தம் படையுடன் வந்தார். யுத்த களத்திலே வீரமரணம் அடைந்துவிட்டார் என்றல்லவா

நினைத்தேன்! அயோக்கியன் சிங்கமுகனா பொருளுக்கு ஆசைப்பட்டு அவரை வஞ்சகமாகக் கொன்றிருக்கிறான்? துரோகி! கந்தா, அப்படியானால் நீதான் வீராங்கனாக இருக்க வேண்டும். ஜெயசிங்க பூபதியின் மகன் வீராங்கன் திடீரென்று இறந்துவிட்டதாயும், ஆகவே வாரிசற்ற மரகதக் கோட்டையைத் தனக்கு அளிக்கும்படியும் கேட்டான் சிங்கமுகன். உண்மையறியாத நான் அவனுக்கு — அவன் சேவைக்குப் பரிசாக— அதை அளித்தேன். இப்போதுதான் உன்னைக் கொல்ல அவன் திட்டமிட்டதும், நீ சாகாமல் பிழைத்திருப்பதும் தெரிகிறது. என் நண்பரின் மகனான உன்னை என் பணியாளனாக வைத்திருந்தேனே!" என்று வருந்தினார்.

உடனே தம் வீரர்களை அழைத்து, விரைவில் போய் மரகதக்கோட்டையின் அறை ஒன்றிலே அடைபட்டுக் கிடக்கும் மந்திரியையும் சேனாதிபதியையும் கைது செய்து இழுத்து வரும்படி உத்தரவிட்டார். குதிரை வீரர்கள் அரசரின் உத்தரவை நிறைவேற்றக் காற்றெனப் பறந்தார்கள்.

மந்திரியும் சேனாதிபதியும் புதையலை அபகரித்துக் கொண்டு போக இத்தனை நாள் போட்ட திட்டத்தை எல்லாம் விளக்கினான், கந்தன். அரசருக்கு அப்போதுதான் அவ்விருவரும் எத்தகைய துரோகிகள் என்பது தெரிந்தது.

மந்திரி ருத்திரசிம்மரும் சேனாதிபதி சிங்கமுகனும் அரசர் முன் கொண்டுவந்து நிறுத்தப்பட்டார்கள். நாடு கடத்தப்பட்ட அவர்கள் தம் வார்த்தையை மதிக்காமல் — கருங்காட்டுக்குப் போகாமல்—நாட்டிற்குள்ளேயே இருந்தது வேறு அரசரின் ஆத்திரத்தை அதிகமாக்கியது. தங்கள் அயோக்கியத்தனமெல்லாம் அம்பலமாகிவிட்டதை அறிந்த இருவரும் அரசரின் பாதங்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டார்கள். அந்தக் கொடியவர்களை மன்னிக்க அரசருக்கு விருப்பமில்லை. தூக்குத் தண்டனை விதித்தார். ஆனால், கந்தன் அவர்கள் நிலைக்கிரங்கி அரசரிடம் மன்றாடிக் கேட்டுக்கொண்டதன் பேரில் அவ்விருவரையும் கருங்காட்டிலுள்ள பாதாளச் சிறைக்குக் கொண்டுபோகும்படி உத்தரவிட்டார்.

மறுநாள் காலை வீரர்கள் புடைசூழக் கந்தன் குகைக்குப் போய், மணி காத்துவந்த புதையலை எல்லாம் கொண்டு வந்தான். ஒரு பல்லக்கிலே உண்மை ஊழியனின் எலும்புக் கூட்டை எடுத்துவந்து, நதியோரத்திலே, அமைதியும் அழகும் நிறைந்த ஒரு சோலையிலே, ராஜமரியாதைகளுடன் அதை அடக்கம் செய்தான்.

அரசர் சுமந்திரருக்கு மகன் இல்லாததால் கந்தனையே— இல்லை — வீராங்கனையே மகனாக ஏற்றுக்கொண்டார். துந்துபி நகரம், இளவரசன் வீராங்கனின் வரவால் செல்வங் கொழிக்கும் நாடாயிற்று. சுமந்திரருக்குப் பின் வீராங்கன் அரசனானான். தனக்கு வாழ்வளித்த நண்பன் மணியைக் கந்தன் — இல்லை இல்லை — இளவரசன் வீராங்கன் — அருமையும் பெருமையுமாகத் தன் தந்தையைக் காப்பது போல் காத்துவந்தான். அதிசய நாய் மணியும் அரண் மனையிலேயே ஆனந்தமாகத் தன் வாழ்நாள்களைக் கழித்தது.

— :O: —

# அதிசய நாய்

வாண்டுமாமா



பழனியப்பா பிரதர்ஸ்